கோவை மாவட்டத்தில் கல்கி – 1

KALKI 16.11.86 ரூ. 1.50

# கல்கி



# புகை அரக்கனிடம் சிக்கிய கிராமங்கள்!

# 'நெருப்புப் பிடிச்ச மாதிரி நிவாரணப் பணிகள்'

காமராஜர் மாவட்டத்திலுள்ள ஆவுடையாபுரம் பற்றி, நாம் கவர் ஸ்டோரி வெளியிட்டிருந்ததும், அதை அடிப்படையாகக் கொண்டு, சுப்ரீம் கோர்ட்டில் ரிட் மனு தாக்கல் செய்யப்பட்டு, உடனடியாக அந்தக் கிராம மக்களுக்குத் தேவையான மருத்துவ உதவிகளை அளிக்க வேண்டும் என்று தமிழக அரசுக்கு சுப்ரீம் கோர்ட் ஆணையிட்டிருந்ததும் உங்கள் அனைவருக்குத் தெரியும். சுப்ரீம் கோர்ட் ஆணைக்குப் பிறகு அக்கிராமத்தின் நிலை என்ன?

இதோ நமது 'ரீ—விசிட்' ரிப்போர்ட்.....



நாள் 4.11.1986.

நேரம்: சூரியன் உக்கிரமாகாத காலை 9.30.

இடம்: மிகச் சமீபத்தில் பிரசித்தி பெற்றுவிட்ட ஆவுடையாபுரம். (எதற்கும் கல்கி 12.10.86 இதழைப் புரட்டிப் பார்க்கவும்.)

சென்ற விஜயத்தின் போது உதவிய மா. விஜயனைத் தேடினேர். உடன் .அகப்ப



டார்.

"நீங்க வந்துட்டுப் போனதிலேர்ந்து, இந்த கிராமத்தில நெருப்புப் பிடிச்சா மாதிரி நெறைய விஷயங்கள் நடந்து போச்சுங்க. வாரத்துக்கு ரெண்டுகா ஜீப்பு. ஆஃபீஸருங்க, டாக்டருங்க. அக்டோபர் 14 ந்தேதி மதுரையிலேர்ந்து டாக்டருங்க எல்லாம் வந்தாங்க. ஒரு பக்கம் ரோட்டரி சங்கம் ஏற்பாடு பண்ணி ஒரு பெரிய டாக்டரும் வந்தாரு. இன்னும் ஒரு வாரங்களிச்சி ஜில்லா ஆஸ்பத்திரி டாக்டருங்க அத்தனை பேரும் இங்க வந்து முகாமிட்டாங்க. ஊர்ல இருக்கற ஒவ்வொரு குடும்பத்துக்கும் போய், என்னென்ன நோய்னு சென்ஸஸ் எடுத்தாங்க. நாங்க உபயோகப்படுத்தற தண்ணியையெல்லாம் டெஸ்ட் பண்ண எடுத்துட்டுப் போனாங்க. இதுதவிர கொசு டாக்டருங்க, மூணு ஷிஃப்டா வேலை செய்துங்க, ராத்திரி ஒரு மணி வரைக்கும் இருந்து, வேற வேற நேரத்தில கொசுவெல்லாம் புடிச்சி, அதனால என்னென்ன நோய் வருதுன்னு ஆராய்ச்சி பண்ண எடுத்துட்டுப் போயிருக்காங்க.

அக்டோபர் 30 ந்தேதி செக்ஷன் அதிகாரிங்களோட கலெக்டர் வந்திருந்தாரு. எங்க கொறைங்களையெல்லாம் பொறுமையாக் கேட்டுக்கிட்டாரு. அங்கேயே அதிகாரிங்களுக்கு உத்தரவு போட்டாரு..."

"ரஷீதாபீவி வீட்டுக்குப் போகலாமா?"

தார்சா சாஹிப்

என்றோம்.

ரஷீதாபீவி தோட்ட வேலைக்குப் போயிருந்தார்: அவருடைய பாதிக்கப்பட்ட இரு குழந்தைகளும் மட்டத் திண்ணையில் பாட்டியுடன் விளையாடிக் கொண்டிருந்தன.

''டாக்டர் வந்திருந்தாரா?'' என்று பாட்டியிடம் கேட்டோம்.

''ஆ... வந்தாங்க. சின்னப் புள்ளைக்குத் தான் சொட்டு மருந்து ஊத்தினுங்க. பெரியவளுக்கு மாத்திரைதான் கொடுத்தாங்க. கையைக் காலை தினம் நீட்டி மடக்கணும்னு சொன்னுங்க.''

''டாக்டர் சொன்ன பயிற்சியெல்லாம் செய்றீங்களா?''

''இதா... இப்ப நீங்க வர்றப்போ கூட, நான் கையக், கால்ல நீவி விட்டுக்கிட்டுத் தான் இருந்தேன். கொளந்தைக்கு ஆபரேஷன் பண்ணச் சொன்னு ஒத்துக்குவீங்களான்னு கலெக்டரு கேட்டாரு. ஆபரேஷன் பண்ணிக்கிட்டாத்தான் காலு வரும்னு வேணும்னு சொல்ல முடியுங்களா? சரின்னு சொல்லிட்டோம்.''

அடுத்து மதார்சா சாஹிப். பள்ளி வாசலுக்கு அருகே சுவரை ஆதரவாகப் பிடித்துக் கொண்டு தட்டுத் தடுமாறிப் படிகளில் இறங்கிக் கொண்டிருந்தார். நிறுத்தினேம். கேட்டோம்:

''டாக்டர் வந்து பார்த்தாரு. மருந்து கொடுக்கலே. ஊசி போடலே. மாத்திரை தான் கொடுத்தாரு. இப்படிக் கையைப் புடிச்சி அடிக்கடி உசரத் தூக்கணும்னு சொல்றுங்க. என்னுல செய்ய முடியலே ஐயா. இன்பவும் நீர் பிரிய அரை மணிநேரம் உக்கார வேண்டியிருக்கு. விருதுநகர் டாக்டர் வந்தாரு. அவரைக் கேட்டேன். எல்லாம் சரியாப் போயிடும்னுரு. மாத்திரைதான் சரியாப் போயிடிச்சி. நாலு நாளா மாத்திரை இல்லே.''

இந்தமதார்சாசாஹிபின் குடும்பஏழைமை தீர முதியோர் பென்ஷனுக்கும் உத்தரவிடுவதாகக் கலெக்டர் சொல்லியிருக்கிறாராம்.

பொதுவாக ஊர் மக்களிடத்தில் டாக்டர்களைப் பற்றி ஒரே ஒரு பெரிய குறை! யாருமே ஊசி போடவில்லையாம்! பாட்டில் மருந்து கொடுப்பதில்லையாம்! மாத்திரையாய்க் கொடுத்தால் கவனிப்பு போதாது என்று நினைத்து வருத்தப்படுகிறார்கள். டாக்



• மா. விஜயன்



• சமுகக்கனி ராவுத்தர்

திரைகளைப் பற்றி இவர்களுக்கு இருக்கும் இழிவான எண்ணத்தை முதலில் மாற்ற வேண்டும்.

பஞ்சாயத்து பிரசிடெண்ட் சமுகக்கனி ராவுத்தர் வீடு பூட்டியிருந்தது. குடும்பத்துடன் கொடிக்கால் தோட்டத்திற்கு வேலை செய்யப் போய் விட்டதாய்த்தகவல். நாங்கள் விடுவதாய் இல்லை, ஏறக்குறைய இரண்டு கிலோ மீட்டர் நடந்து அவரைத் தோட்டத்தில் சந்தித்தோம்.

''எங்க ஊருக்குக் கலெக்டர் வந்தாருங்க. விருதுநகர். தாசில்தாரு ரெண்டு மூணுகா வந்தாரு. B. D. O. வந்தாரு. தண்ணீர்ப் பிரச்னையை உடனே கவனிக்கறதாச் சொல்லியிருக்காங்க. இதுதவிர நரம்பு சம்பந்தமான டாக்டருங்க, கொழுந்தைங்களுக்குப் பயிற்சி கொடுக்க வந்து போயிட்டிருக்காங்க. நாப்பது நாளில நல்ல தண்ணி வந்துடுமாம். ஆஸ்பத்திரி, ஸ்கூலு எல்லாத்தையுமே சீர் செய்ய உத்தரவு போட்டிருக்காங்க. இப்பதான ஆரம்பம். எல்லாம் செய்வாங்கன்னு நம்பறோம். யாருமே கவனிக்காம இருந்த எங்க கிராமத்துக்கு கல்கி பத்திரிகையாலதாங்க விமோசனம் வந்திருக்கு'' என்றார் நாத்தழுதழுக்க.

மதியம் ஒன்றரை மணியளவில் புது மெருகு கலையாத **Hero-Honda** ஒன்று ட்ர்ர் என்று கிராமத்தில் நுழைந்து பூட்டப்பட்டிருந்த பஞ்சாயத்து ஆஃபீஸ் வாசலில் நின்றது. ஹெல்மெட்டை விலக்கி வண்டியிலிருந்து இறங்கியவர் டாக்டர் மதியழகன் **M. S. (Ortho).**

இளம்பிள்ளை வாதத்தால், மற்றும் முடக்கு வாதத்தால் பாதிக்கப்பட்ட சிறியோர் பெரியோருக்கு, காலிபர்ஸ் (**Callbers**) என்றழைக்கப்படும் பட்டைக் கம்பிகள் கோர்த்த சிறப்புப் பாத அணிகளைச் செய்து வழங்க, தேவையான அளவுகளை எடுத்துப் போக ராஜபாளையத்திலிருந்து ஸ்பெஷலாக வந்திருக்கும் ஸ்பெஷலிஸ்ட்.

ஆள் அனுப்பப்பட்டு பஞ்சாயத்து ஆஃபீஸ் திறக்கப்பட்டது. பாதிக்கப்பட்டவர்களைச் சேகரிக்க, ('சீக்கிரம் எல்லாரையும் கூட்டிட்டு வாங்க. இன்னிக்கு அளவெடுக்கிறவங்களுக்குத்தான் பூட்ஸ் கிடைக்கும்'

— டாக்டர்) ஆள் பறந்தது.

**ஊ**ரில் ஜுரவேகத்தில் காரியங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. சென்ற முறை நாங்கள் போன போது ஊனமாயிருந்த அடிபம்பு இப்போது சரிப்படுத்தப்பட்டு தாய்மார்களுக்குப் பூமியின் அடியிலிருந்து தண்ணீரை வாரி வழங்கிக் கொண்டிருக்கிறது.

கல்கியில் செய்தி வெளிவந்த பிறகு, தமிழ் தினசரிகளும், ஆங்கில தினசரிகளும், அத்தனை கட்சிக்காரர்களும், இதுநாள் வரை திரும்பிப் பார்க்காத தொகுதி எம். எல். ஏவும் இந்த ஊருக்குக் கச்சைக் கட்டிக் கொண்டு பறந்திருக்கிறார்கள். ஆளுக்கொரு அறிக்கை விட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

எப்படியோ நல்லது நடந்தால் சந்தோஷம் தான் என்ற எண்ணத்தோடு ஊரை விட்டுப் புறப்பட்டோம்.

### காமராஜர் மாவட்டக் கலெக்டர் ஆவுடையாபுரத்தைப் பற்றி என்ன சொல்கிறார்?



* கலெக்டர் விஜயராகவன்

"கல்கி ரிப்போர்ட் எங்களுக்கு ஒரு விழிப் புணர்ச்சி தந்தது. 12.10.86 இதழ் வெளியான இரண்டாவது நாளே ஆரம்பகட்ட சர்வேக்காக ஒரு மருத்துவக் குழுவை அனுப்பி வைத்தேன். இரண்டு அடிப்படைகளில் அவர்கள் பார்வையிட்டார்கள். ஏற்கெனவே பாதிக்கப்பட்டவர்களுக்கு என்ன செய்யலாம், இனிமேல் பாதிக்கப்படாமல் இருக்க என்ன செய்யலாம். பொதுவாக முடக்குவாதம் தண்ணீரால் மட்டுமில்லை, நெருங்கிய சொந்தத்தில் பெற்றோர்கள் திருமணம் செய்து கொண்டதாலும் ஏற்படலாம் என டாக்டர்கள் கருத்துத் தெரிவித்து உள்ளார்கள். பிரச்னைக்குள்ளான தண்ணீரைச் சென்னைக்குச் சோதனை செய்ய அனுப்பி உள்ளோம். சிறுவர்களுக்கு காலிபர்ஸ் (இளம்பிள்ளை வாத பூட்ஸ்) பெரியவர்களுக்கு ஊன்றுகோல்கள், மூன்று சக்கர சைக்கிள், சக்கர நாற்காலி இவைகளை ஒரு மாதத்திற்குள் வழங்கவும் முயற்சி எடுத்துக் கொள்கிறோம். உடற்பயிற்சி கொடுக்கத் தினமும் ஒரு ஃபிஸியோதெரபிஸ்ட் ஆவுடையாபுரம் செல்ல ஏற்பாடு செய்துள்ளோம்...

"நல்ல குடிநீரை ஊருக்கு வழங்க மெட்ராஸ் சிமெண்ட்ஸ் நிறுவனத்திடம் அனுமதி பெற்று அவர்களுடைய பிரைவேட் சாலையில் 110 அடிக்கு ஓர் ஆழ்குழாய் தோண்டினோம். ஆனால் பக்கத்தில் இருக்கும் காளையாபெருமாள் கோயில் மக்கள் அவர்களுடைய பகுதியில் பாசனத்திற்கு உண்டான நீர் குறைந்துவிடும் என்று மனு எழுதிக் கொடுத்து இதைத் தடுத்து விட்டார்கள். மன்னூர்கோட்டை மக்களும் இதேபோல் முட்டுக்கட்டை போடுகிறார்கள். இதை விட்டால் சாத்தூருக்கு அருகில் உள்ள அர்ச்சுனா நதியிலிருந்து நீர் கொண்டு வர வேண்டும். அதற்கு நாள் பிடிக்கும். எப்படியும் ஒரு மாதத்திற்குள் நேரடியாக கிராமத்திற்குக் குழாய் மூலம் நீர் கொடுத்து விடுவோம்.

"சீரழிந்த சத்துணவுக்கூடம் இப்போதைய புது தாய் சேய் நல விடுதிக்கு மாற்றப்படுகிறது. பழைய தாய், சேய் நல விடுதியைப் புதுப்பித்து உபயோகப்படுத்தவும் உத்தரவிட்டிருக்கிறேன். புதிதாக ஆரம்ப சுகாதார நிலையம் ஒன்றை ஆவுடையாபுரத்தில் அமைக்க இயலுமா என்பது பற்றியும் புள்ளி விவரங்களைச் சேகரித்துக் கொண்டிருக்கிறோம். இதற்குச் சுமார் இருபது லட்சம் செலவாகும். அரசு அனுமதிக்க வேண்டும். இதற்கிடையில் வாரம் இருமுறை கன்னிசேரியிலிருந்து டாக்டர்கள் வந்து ஆவுடையாபுரம் மக்களுக்கு மருத்துவ வசதி அளிக்குமாறு ஏற்பாடு செய்திருக்கிறேன். இதுதவிர மக்களின் மற்ற குறைகளையும் ஒவ்வொன்றாய்த் தீர்க்கச் சம்பந்தப்பட்ட துறை அதிகாரிகளுக்குச் செய்தி அனுப்பியுள்ளேன்.

"விருதுநகரிலிருந்து கழிவுநீர் கௌசிக நதியில் கலக்காமல் தவிர்க்க ஆவன செய்ய நகரசபைக்கு உத்தரவிட்டுள்ளேன். இதே போல் தீப்பெட்டித் தொழிற்சாலைக் கழிவுப் பொருள்களும் ஆவுடையாபுரம் ஊரணியை அசுத்தப்படுத்தக் கூடாது என்றும் சம்பந்தப்பட்டவர்களுக்கு ஆணை பிறப்பித்துள்ளேன்."

கலெக்டருடைய வார்த்தைகளில் சொன்னதைச் செய்யும் துடிப்பு இருந்தது. நம்பிக்கையுடன் காத்திருப்போம்.

— சுரேஷ் — பாலா

# புகை அரக்கனிடம் சிக்கிய கிராமங்கள்!



* பழனியம்மாள் முத்தம்மாள்

எங்கள் கார் கேரளா செல்லும் தேசிய நெடுஞ்சாலையில் விரைந்து கொண்டிருந்தது.

''டிரைவர், மதுக்கரைக்கு இன்னும் எவ்வளவு தூரம்?''

''ஐந்து கிலோ மீட்டர் இருக்குங்க. அதோ பாருங்க, புகை தெரியுதுல்லே.... அதுதான்!''

டிரைவர் சுட்டிக்காட்டிய அந்தப் புகையைப் பார்த்தோம். சாதுவாக மேலே போய் வானத்தில் படர்ந்து கொண்டிருந்தது.

இந்தப்புகையா அத்தனை பாதிப்பை உண்டாக்கியிருக்கிறது?

''சிமெண்ட் தொழிற்சாலையிலிருந்து வரும் இந்தப் புகையினால் எங்கள் பகுதியைச் சேர்ந்த பல கிராமங்களில் கடந்த ஐம்பது ஆண்டுகளாக மக்கள் நரக வேதனைகளை அனுபவித்து வருகிறார்கள். விவசாயம் அடியோடு பாழாகி விட்டது-பூமி தனது மிருதுத் தன்மையை இழந்து கொண்டிருக்கிறது; ஆயிரக்கணக்கான ஏக்கர்களில் தக்காளி



* புகை கக்கும் சிமெண்ட் ஆலை



* நிறம் மாறிய தென்னைகளும் தோட்டமும்

வெண்டைக்காய், கத்தரிக்காய் போன்று பல குறுகிய காலப் பயிர்களைச் செய்து கொண்டிருந்தோம். அதுவும் போச்சு. தென்னை, பனை போன்று எந்த மரங்களும் எங்கள் பகுதியில் வளருவதில்லை. கண்ணம்புச் சுரங்கத்தில் போர் போட்டுத் தண்ணீர் எடுப்பதால் தண்ணீர் மட்டம் பூமிக்குக் கீழ் வெகு

தூரத்துக்குப் போய்க் கொண்டேயிருக்கிறது. அதனால் தண்ணீர்ப் பஞ்சம் வேறு. உண்ணும் உணவு, குடிக்கும் தண்ணீர், சுவாசிக்கும் காற்று ஆகிய எல்லாவற்றிலும் இந்தப் புகை கலந்து விடுவதால் எங்கள் பகுதி மக்களுக்கு டி.பி., ஆஸ்துமா, கண் எரிச்சல் போன்றவை வருகின்றன. உங்கள் நிருபர்களை இப்பகுதிக்கு அனுப்பி வையுங்கள். அவர்கள் எங்கள் நரக வேதனையை நேரில் பார்த்தால்தான் பிரச்னையின் தீவிரம் புரியும்.''


• ராமக்கா

இந்தப் புகையினால் ஏற்படும் அலர்ஜி. நீங்க இந்தப் பகுதிலே இருந்தா சீக்கிரமே உங்கள் தலை நரைத்து விடும். எங்களுக்கு இந்த ஆலை வேலை கொடுக்கறதுனாலே இந்த சிமெண்ட் புகை ஆபத்தைப் பற்றிச் சொல்லாம இருக்க முடியுங்களா?'' என்ற நாகராஜனிடம், ''குரும்பப்பாளையம் எங்கேங்க?'' என்றோம்.

''அதோ தெரியுதில்ல... அந்தக் கிராமம்தான்....'' என்று கை காட்டினார்.

அவர் சொன்ன கிராமத்தைப் பார்த்தோம். ''ஆஸ்பெஸ்டாஸ் கூரை

மதுக்கரை குரும்பப்பாளையம் கு.மா. ஆறுச்சாமி குமுறலுடன் எழுதியிருந்த கடிதத்தின் சுருக்கம்தான் மேலே!

இதற்குள் மதுக்கரையை நெருங்கிவிட்டோம்.

''ஐயா... குரும்பப்பாளையம் பிரிவு எப்படிப் போவனுங்க?''

''இதோ இந்த பாக்டரி பக்கமாகவே போங்க....''

சுண்ணாம்புக் கல் சுரங்கத்திலிருந்து கடமுடா சப்தத்துடன் லாரிகள் ஆலைக்கு விரைந்து கொண்டிருந்தன. ரயில்வே லயனைத் தாண்டி பாக்டரிக்குப் பின்புறம் வந்து, யாராவது கண்ணில் தெரிந்தால் குரும்பப்பாளையம் எங்கிருக்கிறது என்று விசாரிக்கலாம் என்று தூரத்தில் பார்த்த போது.... தெரிந்த அந்தத் தென்னை மரங்களெல்லாம் சாம்பல் அடித்துப் போய்.... வளர்ச்சி குன்றி நோஞ்சான் குழந்தைகளைப் போலக் காட்சியளித்துக் கொண்டிருந்தன. கண்ணுக்கெட்டிய தூரம் வரை பச்சை இன்றி 'சிமெண்ட்' ஆகவே காட்சியளித்தது. ரோட்டின் ஓரத்தில் இருக்கும் ஒரு சின்னச் செடியின் இலையை லேசாகத் தட்டி விட்டால்கூட குப்பென்று கிளம்பும் சிமெண்ட் புகை!

தோளில் துண்டும், தலையில் கோணியுமாக வந்தார்கள் குரும்பப்பாளையம் முத்தம்மாவும் ராமக்காவும். புகையை பற்றிக் கேட்டதுமே பொரிந்து தள்ளிவிட்டார்கள்.

ராமக்காவுக்கு ஆஸ்துமாவாம். முத்தம்மாவுக்கு அடிக்கடி கண் எரிச்சல் ஏற்படுவதோடு கண்ணில் நீரும் கொட்டுகிறதாம். நாங்கள் இவர்களை விசாரித்துக் கொண்டிருந்தபோதே ஆலையில் தற்காலிகமாக வேலை செய்யும் நாகராஜன் என்பவர் வேகமாகச் சைக்கிளில் வந்தார்.

''இதப் பாருங்க ஸார்! கால்ல பொறிப் பொறியா கொப்பளம் போல. எல்லாம்

போட்ட வீடுகள்தான் அங்கே நிறைய இருக்கு போல!'' என்று நாங்கள் கூறியதும் எங்களை நோக்கி ஏளனமாகப் பார்த்தார் நாகராஜன்.

''அது ஆஸ்பெஸ்டாஸ் கூரை இல்லீங்க. இந்த சிமெண்ட் புகை தாங்க ஓட்டு வீடுகளையெல்லாம் ஆஸ்பெஸ்டாஸ் கூரை போல மாத்திடுச்சு'' என்றார்.

''அடாடா!'' என்று மனத்தில் பாரத்தைச் சுமந்து கொண்டு குரும்பப்பாளையம் நோக்கிச் சென்றோம்.

144 தடை உத்தரவு போட்டது போல் தெருக்களில் மக்கள் நடமாட்டத்தையே பார்க்க முடியவில்லை. பெரும்பாலான வீட்டுக் கதவுகள் மூடப்பட்டுக் கிடந்தன. கோணிகளைக் கட்டிப் புகை அரக்கனிலிருந்து தமது கடையைக் காத்துக் கொள்ள வீண் முயற்சி எடுத்திருந்த பெட்டிக்கடைக்காரர் ஒருவரிடம் புகையைப் பற்றிப் பேச்சுக் கொடுத்தோம்.

''இதுக்கெல்லாம் சரியான ஆளு இங்கே ஒருத்தர் இருக்காருங்க....'' என்று ஒருவரை அழைத்து வரச் சென்றார் அவர்.

அந்தப் பெட்டிக் கடையிலிருந்து பாக்டரியைப் பார்த்தோம். தூரம் ஒரு கி.மீ. தான் இருக்கும். வெளிப்படும் புகை காற்றால் உந்தப்பட்டு குரும்பப்பாளையத்தின் மீது குப்பென்று இறங்கியது. பக்கத்தில் இருந்த ஜூகியின் சட்டையைத் தட்டிவிட்டேன்: அவரைச் சுற்றிலும் புகை கிளம்பியது. எலெக்ட்ரிக் கம்பிகளிலெல்லாம் புகை படிந்து அவை அந்தப் புகையிலிருந்த சிமெண்ட்டால் கனத்துப் பெருத்திருந்தன. எங்கள் டிரைவர் கண்ணாடிக் கதவுகளை மூடிவிட்டுக் காரைத் துடைத்துக் கொண்டே இருந்தார். அந்த அளவுக்குச் சிமெண்ட் துகள்களைக் கொட்டிக்கொண்டேயிருந்தது புகை.

''வணக்கங்க.... நான்தாங்க ஆறுச்சாமி. புகைத் தடுப்பு கமிட்டியின் இணைச் செயலாளர்!'' என்று ஒருவர் வந்து அறிமுகப்படுத்திக் கொண்டார். இவரும் சிமெண்ட் ஆலையில் வேலை செய்பவர்தான்.

''நாங்கள் இங்கே பரம்பரை பரம்பரையா

* நாகராஜன் * நாராயணசாமி



இருக்கிறோமுங்க. எங்கள் கிராமத்துல விவசாயம் அடியோடு போச்சு. பெரும்பாலோர் இந்த ஆலையில்தான் வேலை செய்யறோம். விவசாயம் போனாலும் ஏதோ வேலை கொடுத்தாங்களேன்னு பல கஷ்டங்களுக்கிடையேயும் இங்கேயே தொடர்ந்து இருக்கோம். ஆனாப் பாருங்க, மத்த கிராமங்களையும் இந்தப் புகை பாதிக்குது. ஈச்சனேரி, மதுக்கரை, செட்டிப் பாளையம், மாச்ச நாயகன் பாளையம், போடி பாளையம், வெள்ளலூர், கோண வாய்க்கால் பாளையம், பாலத்துறை, திருமலையம் பாளையம், மரப்பாலம்.... என்று பத்து கிராமங்களிலும் விவசாயம் போச்சு. அவங்க எல்லோருக்குமா இந்த ஆலையில் வேலை கிடைக்கும்? அதனாலே அவ்ங்க எல்லோருக்கும் இந்த ஆலை பேரில் எரிச்சல். நிறையப் பேர் கோயமுத்தூருக்குக் கூலி வேலை செய்யப் போயிட்டாங்க."

"உங்கள் புகைத் தடுப்பு குழு இந்த விஷயத்தில் என்ன செய்திருக்கிறது?

"எங்க தொகுதி எம்.பி., எம்.எல்.ஏ.க்கள் ஆகியோருக்கு பல தடவை எழுதியும் வழக்கம் போல பிரயோஜனமில்லீங்க. ஆனா தண்டபாணி என்கிற தி.மு.க. எம்.எல்.சி. மேல் சபையில் இந்த ஆலைப் புகையினால் சுவாச நோய் ஏற்படுகிறது என்று பேசியிருக்காருங்க.... 'சுற்றுப்புறச் சூழல் கட்டுப்பாடு' என்று ஒரு துறையே மத்திய, மாநில அரசாங்கங்களிலே இருக்குங்க. ஆனா ஒரு நடவடிக்கையும் எடுக்கறதில்லீங்க. நாங்கதான் கொஞ்சம் கொஞ்சமா மக்களிடம் இந்தப் புகையினால் வரும் தீமைகளை எடுத்துரைத்து ஒன்றுபட்ட ஒரு போராட்டத்திற்கு ஏற்பாடு பண்ணப் போறோமுங்க. மற்ற சிமெண்ட் தொழிற்சாலைகள் வெளிவிடும் புகை, இந்த அளவுக்கு இல்லை. இந்த அளவுக்குப் பாதிப்பை ஏற்படுத்தறதும் இல்லீங்க. ஆனா இந்தத் தொழிற்சாலை எரிகலன்கள் (Kiln) என்னமோ சரியில்லீங்க. அபி



* ஆறுச்சாமி

விருத்தி செய்யணும். புகை போக்கியின் மேல், தூசியை வடிகட்ட 'டஸ்ட் ஃபில்டர்' வைச்சுருக்கோம்னு சொல்றாங்க. ஆனா நீங்களே பாருங்க, எவ்வளவு தூசி புகையோடு கிளம்பி வருதுன்னு...."

நாங்கள் தெருவில் நின்று பேசிக் கொண்டிருக்கும்போதே எங்கள் மேல் ஒரு எம்.எம். க்கு புகை படிந்திருக்கும். இதற்குள் புகைத் தடுப்புக் கமிட்டியின் செயலாளர் நாராயணசாமி வந்தார்.

"இந்தக் கிராமத்துலே ஒரே ஒரு குழாய்க் கிணறுதாங்க. அதிலேர்ந்து வர்ற தண்ணியைத் தானுங்க குடிக்கிறோம். ஆனா அந்தத்

* வீட்டுக் கூரையெல்லாம் சிமெண்ட் புகை மூடிய காட்சிதான்.....



தண்ணீர் குடிக்க லாயக்கில்லாதது என்று அரசே சொல்லியிருக்குங்க. இருந்தாலும் எங்களுக்கு வேறே வழியில்லீங்க. இதைத் தானுங்க குடிச்சுக்கிட்டு இருக்கோம். இந்தப் புகையினாலே கோயில் கிணத்துத் தண்ணீர் கூடப் பாழாப் போயிடுச்சுங்க...." என்றார்.

குழாய்க் கிணற்றின் பக்கம் போனோம். பழனியம்மாள் என்ற மூதாட்டி கையில் குடத்துடன் வந்தார். "இதப் பாருங்க. இந்த அம்மாளுக்கு ஒரு பக்கப் பார்வையே போயிடுச்சுங்க. டாக்டரைக் கேட்டால், 'புகையினால்வந்தகோளாறுதான்' என்கிறார்" என்று நாராயணசாமி சொல்லிக் கொண்டிருக்கும்போதே பார்வையில்லாது போன ஒரு கண்ணை விரித்துக் காண்பித்தார் பழனியம்மாள்.

"இந்தப் புகை காரணமா நாங்க இங்கே ஆடு, மாடு, கோழியெல்லாம் வளர்க்க முடியாதுங்க. ஒயர்லே புகை கட்டியாக படிஞ்சிருப்பதால் அடிக்கடி மின்தடை ஏற்படுமுங்க. ஏனுங்க, இந்தப் புகையைக் கட்டுப்படுத்த முடியாதா? நாங்க ஆலையே வேண்டாம்னு சொல்லலீங்க. இந்த விஞ்ஞான யுகத்தில எவ்வளவோ கண்டுபிடிச்சிருக்காங்க. இந்தப் புகையைக் கட்டுப்படுத்த வழி கண்டு பிடிக்கலையா? பாருங்க.... எங்க கிராமத்துல இருந்த ஹரிஜன காலனி மக்கள் இந்தப் புகை அரக்கனின் தொல்லையால் காலி செஞ்சுக்கிட்டுப் போய்ட்டாங்க!" என்று நாராயணசாமி சொல்லிக் கொண்டே வந்தார்.

இப்படி ஆளுக்கு ஆள், புகையின்

பேராசிரியர் வே. ஸ்ரீ. வேங்கடராகவாசார்யர் எழுதி, 'லிப்கோ' பெருமையுடன் வெளியிட்டுள்ள மஹாகவி காளிதாஸரின்

# மூன்று காவ்ய ரத்னங்கள்

தேவநாகரியில் மூலத்துடனும், தமிழில் தெள்ளிய பதவுரை, கருத்துரை, விளக்கவுரையுடனும் கூடியவை

1. ரகுவம்ச மஹாகாவ்யம்

ராமனுடைய கதையையும், அவருக்கு முன்பின் ஆண்ட அரசர்களின் வரலாற்றினையும் கவிதை நயத்துடன் வர்ணிப்பது.

19 ஸர்க்கங்கள் 1198 பக்கங்கள் விலை ரூ. 55/—

2. குமாரஸம்பவ மஹாகாவ்யம்

கந்தபிரானின் அவதாரத்தை விரும்பிய தேவர்களின் வேண்டுகோளை ஏற்று, சிவபெருமான் பார்வதியை மணந்துகொண்ட வரலாற்றினைக் கவிதை அழகு மிளிர விரிவாகக் கூறுவது.

8 ஸர்க்கங்கள் 584 பக்கங்கள் விலை ரூ. 25/—

3. மேகசந்தேச காவ்யம்

சாபத்தின் காரணமாகத் தன் அருமைக் காதலியைப் பிரிந்த யக்ஷன் ஒருவன் மேகத்தின் மூலம் அவளுக்கு ஆறுதல் கூறும் சந்தேசத்தைக் கவி, தம் கற்பனையில் தோன்றியதைத் தமக்கே உரிய பாணியில் மனத்தைக் கவரும் வகையில் விப்ரலம்ப சிருங்காரத்தை வர்ணித்துள்ளார்.

2 ஆச்வாஸங்கள் 312 பக்கங்கள் விலை ரூ. 20/—

ஸம்ஸ்க்ருதம் அறியாதவர்கள்கூட ஒவ்வொரு ச்லோகத்தின் கருத்துரையையும் தொடர்ந்து படிப்பார்களாயின், இம்மூன்று காவ்யங்களின் இன்சுவையை நன்கு அனுபவிக்கமுடியும். ஒவ்வோர் வீட்டிலும் இருக்கவேண்டிய மும்மணிகள்.

## 6.12.1986 முடிய சலுகை:

மேற்படி மூன்று நூல்களும் முறையே ரூ.47, ரூ.21, ரூ.17 ஆகிய சலுகை விலைகளில் கிடைக்கும். தபாலில் பெற விரும்புவோர் முறையே ரூ.51, ரூ.24, ரூ.20 மணியார்டர் அல்லது டிராப்ட் அனுப்புக. மூன்று நூல்களும் வேண்டுவோர் ரூ.90 அனுப்புக.

பதிப்பகத்தார்:

## தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,



43, ரங்கநாதன் தெரு, தபால் பை எண் 1028,
தியாகராயநகர், சென்னை 600 017.
போன்: 441538 58-ஆம் ஆண்டு!

# மீண்டும் எல்.ஐ.சி. அளிக்கும் வரலாறு படைக்கும் போனஸ்

எல்.ஐ.சி. போனஸ் புதிய
உச்ச அளவை எட்டுகிறது

எல்லா இலாப உரிமை உடைய குறித்தகால மற்றும் முழு ஆயுள் பாலிசிகளுக்கு 30 வது ஆண்டு விழா போனஸ் அறிவிப்பதில் எல்.ஐ.சி. பெருமை அடைகிறது.

இந்த போனஸ் 1986, மார்ச் 31ம் தேதிய சொத்துகள் மற்றும் பொறுப்புக்களின் சிறப்பு மதிப்பீட்டின் படி அறிவிக்கப்படுகிறது.

போனஸ் விகிதங்கள் கீழ் வருமாறு:

| | |
|---|---|
| **முழு ஆயுள் காப்பு பாலிசிகள்** | **பிரதி ரூ. 1000 காப்பு தொகைக்கு ஆண்டு ஒன்றிற்கு ரூ. 65** |
| **குறித்த கால பாலிசிகள்** | **பிரதி ரூ. 1000 காப்பு தொகைக்கு ஆண்டு ஒன்றிற்கு ரூ. 52** |

1985 மார்ச் 31ம் தேதி மதிப்பீட்டின்படி போனஸ் அறிவிக்கப்பட்ட தேதியில் இருந்து ஒரு ஆண்டிற்குள்ளாகவே இந்த போனஸ் அறிவிக்கப்படுகிறது.

பெருகும் புது வணிகம், நிதி நிர்வாகத்திறன், செலவு கட்டுப்பாடு வரை முறைகள் மற்றும் முதலீட்டு வருமான உயர்வு ஆகியவையே இவ் வரலாற்று போனஸ் அறிவிப்பை சாத்தியமாக்கி உள்ளன.

கிளை அலுவலகங்களுக்கு அதிக பொறுப்புக்களும் அதிகாரங்களும் வழங்கப்பட்டதன் மூலம் பின் விற்பனைகால சேவை மேலும் சிறப்படைந்துள்ளது.

இந்த சீரிய போனஸ், மற்றும் தகுதி உடைய பாலிசிகளுக்கு அளிக்கப்படும் கவர்ச்சிகரமான இறுதி (கூடுதல்) போனஸ் ஆகியவை ஆயுள் காப்பீட்டிற்கு இணையான சீரிய பாதுகாப்பு வேறு இல்லை எனக் கூறும் படி செய்து விட்டன.

உங்களுக்கும் உங்கள் குடும்பத்திற்கும் ஆயுள் காப்பை பெருக்கிக் கொள்ள இது தகுந்த தருணம்.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

**30 ஆண்டுகள் மக்கள் சேவையில்**

கொடுமையைப் பற்றி வயிற்றெரிச்சலுடன் சொல்லிக் கொண்டிருந்தார்கள். எங்களால் ஒரு மணி நேரம்கூட அந்தக் கிராமத்தில் நிற்க முடியவில்லை. கண் எரிச்சல், தோல் வியாதி, ஆஸ்துமா, டி.பி. போன்ற நோய்கள் தாக்கினாலும், அந்தக் கிராமத்திலும் சுற்றி உள்ள கிராமங்களிலும் தொடர்ந்து வசிக்கும் மக்களைப் பார்த்தபோது வேதனைப் பந்து தொண்டையை வந்து அடைத்துக் கொண்டது. ''நீங்க எழுதினால் ஒரு விமோசனம் பிறக்குங்க....'' என்று எங்களைப் பின் தொடர்ந்து வந்து கூறிக் கொண்டே இருந்த ஆறுச்சாமியின் வார்த்தைகள் நெஞ்சுக்குள் இன்னமும் ரீங்காரமிட்டுக் கொண்டே இருக்கின்றன.

## ஏ.சி.சி. நிர்வாகம் என்ன சொல்கிறது?

மதுக்கரை சிமெண்ட் தொழிற்சாலையை நடத்தும் ஏ.சி.சி. நிர்வாகத்தின் பெர்ஸானல் மானேஜர் கோபிசந்திரனைச் சந்தித்தபோது.....

"ஆரம்பத்தில் இங்கு எதிர்பார்க்கப்பட்டதுபோல் உயர் ரக சுண்ணாம்புக் கற்கள் கிடைக்காமல் இப்போது கிடைக்கும் மட்டரகமான சுண்ணாம்புக் கற்களும் இந்தப் புகையோடு வெளி வரும் தூசிக்கு ஒரு காரணம். (மூலப் பொருள் மட்டரகமென்றால் உற்பத்தியாகும் சிமெண்டின் தரம் பாதிக்கப்படாதோ? அப்படி இல்லையாம்!)

"மேலும் இந்தத் தொழிற்சாலை மிகவும் பழைய தொழிற்சாலை. தொழில் நுட்பம் சரியாக முன்னேறாத நாட்களில் தொடங்கப்பட்டது. எங்களுக்கு இந்தியா முழுவதும் பதினெட்டு சிமெண்ட் ஆலைகள் உள்ளன. எங்கள் சிமெண்ட்டுக்கு நல்ல மார்க்கெட் இருக்கிறது. இப்போது ஐந்து எரிகலன்களைக் (Kiln) கொண்டு தினமும் 1,300 டன் சிமெண்ட் உற்பத்தி செய்கிறோம். விரைவில் இங்கிலாந்தில் உள்ள ஒரு கம்பெனியின் தொழில் நுட்ப ஆலோசனையின் பேரில் ஒரு புது யூனிட் ஆரம்பிக்கப் போகிறோம். ஒரே ஒரு எரிகலனைக் கொண்டு 1500 டன் உற்பத்தி செய்யப் போகிறோம். இந்தப் புது யூனிட்டுக்கு Electrostatic precipitators உபயோகிக்கப் போகிறோம். இதனால் புகை மூலம் இப்போது போல தூசி வெளியேறாது. சிமெண்ட் புகை உடம்புக்கு ஆபத்தானது அல்ல. ஆனால் ஒரு 'தொந்தரவு' என்று சொல்லலாம்! இதனால் விவசாயம் பாதிக்கிறது என்பதை என்னால் ஒப்புக் கொள்ள இயலாது.''

— ப்ரியன்

அட்டை வண்ணப்படமும், கோவை மாவட்டச் செய்திகள் தொடர்பான மற்ற படங்களும் எடுத்தவர்:

கே.வி. ஆனந்த்

# அடுத்த இதழ்...

**கோவை மாவட்டத்தில் கல்கி — II**

* பாரதி பெயரில் ஒரு பரிதாபக் கழகம்!

— கவர் ஸ்டோரி



* வைதேகி காத்திருக்கிறாள்!

— ஒரு சின்ன 'பிக்னிக்'

* ''உங்கள் சமுதாயப் பணியை வரவேற்கிறேன்!''

— கோவை மாவட்டக் கலெக்டர் பேட்டி!




ஜனநாயகக் கட்சி
என் இஷ்டத்துக்கு நடக்க முடியாதபடி பண்ணிட்டீங்களே!
ரீகன்

சமரசத் திட்டம்
ஜெயவர்த்தனா

காலிஸ்தான்

என்ன அழகா இருக்கு!

அதுக்குச் செல்லம் கொடுத்து வளர்க்காதீங்க!.. ஆபத்து!

நாடாளுமன்றத்தில் எதிர்க்கட்சிகள்

கூர்க்கா தேசிய விடுதலை முன்னணி



# கல்கி

1986 நவம்பர் 16
மலர் 45 இதழ் 16
அக்ஷய ஐப்பசி 30



## ஈழப் போராளிகளின் வெறிச் செயல்கள்!

தீபாவளியன்று சென்னை, சூளைமேட்டை ஈழப்போராளிகள் யுத்த களமாக அல்ல, கொலைக்களமாகவே மாற்றி விட்டார்கள்! தெருவை அடைத்துக் கொண்டு இவர்கள் நடந்தபோது, எதிரே வந்த ஒருவர் மோதிக் கொண்டாராம். (மோதாமல் என்ன செய்ய?) உடனே இவர்களுக்கு ஆத்திரம் பொத்துக் கொண்டதாம்! அவரை நையப் புடைத்திருக்கிறார்கள். கும்பல் சேர, உணர்ச்சிகள் பொங்க, போராளிகள் தங்கள் வீடுகளுக்குள் பாய்ந்து சென்று தானியங்கித் துப்பாக்கிகளை எடுத்து வந்து கண்மூடித்தனமாகச் சுட்டுத் தள்ளியிருக்கிறார்கள். ஸ்டென் கன்களும் பிரென் கன்களும் தோட்டாக்களைக் கக்க, ஏராள எதிர்காலக் கனவுகளுடன் ஓர் இளைஞர் மரணத்தைத் தழுவியிருக்கிறார். இத்தனைக்கும் அவர் ஒரு சமூகத் தொண்டர். 'வேண்டாம், இந்த அர்த்தமற்ற அராஜகம்' என்று கைகளை உயர்த்தி அசைத்துக் கொண்டே வந்திருக்கிறார். குண்டு உடலில் பாய்ந்து உயிர் குடித்தது தான் அவருக்குக் கிடைத்த பதில்! வேறு பல அப்பாவி மக்கள் படுகாயமடைந்து ரத்தம் சிந்த, தீபாவளி மகிழ்ச்சியெல்லாம் மறைந்து, சென்னையைத் துயரம் கவ்வியது.

ஈழப்போராளிகள் தமிழர்களே, நமது சகோதரர்களே, ஒப்புக் கொள்கிறோம். அவர்களுடைய இறுதி லட்சியத்தையும் அதை அடைய அவர்கள் கையாள்கிற வழிமுறைகளையும் நாம் ஏற்கிறோமா இல்லையா என்பது வேறு விஷயம். இதில் கருத்து மாறுபாடுகள் இருக்கவே செய்யும். மேல்மட்டத்தில் பேசி அரசியல் தீர்வு காண வேண்டிய பிரச்னை அது. அவர்கள் தமிழகத்தில் பயந்து பதுங்குகிறார்களா அல்லது பதுங்கிப் பாய்கிறார்களா என்பதும் நமக்குப் பிரச்னையல்ல. ஆனால் புகலிடம் கேட்டு வந்த இடத்தில் அவர்கள் வாலைச் சுருட்டிக் கொண்டு இருக்க வேண்டும். அவ்வாறின்றி ஈழப்போராளிகள் என்பதால் ஏதோ விசேஷ லைசென்ஸ் பெற்றவர்கள் போல நடந்து கொள்வதும், பிறகு 'தெரியாத்தனமாக நடந்துவிட்டது; மன்னியுங்கள்' என்பதும் தொடர்கதையானால் அதுவே நமது பொறுமைக்கு முற்றும் போட்டுவிடும். மன்னிப்பை நாம் மறுக்கவும் நேரும். 'அகதிகளுக்குத்தான் இங்கு புகலிடம்; அராஜகக் கும்பல்களுக்கு இடமில்லை; வெளியேறுங்கள்' என்று இந்திய அரசு கூறுமானால் இந்தப் போராளிகளின் கதி என்ன? யோசிக்கட்டும்!

ஈழப்போராளிகளின் பல பிரிவினரும் அவர்களின் தலைவர்களும் தமிழகத்தில் இருப்பது ஒருவிதத்தில் வசதியாகவே உள்ளது. அவர்கள் ஒப்புதல் தராத எந்த உடன்படிக்கையும் நீடித்த பலனைத் தராது என்பதால், ஈழப் பிரச்னை தொடர்பான பேச்சு வார்த்தைகளில் அவர்களை அவ்வப்போது சம்பந்தப்படுத்த முடிகிறது. மற்றபடி அவர்கள் இங்கு பயிற்சி முகாம் அமைக்கவோ, பயிற்சி பெறவோ இந்தியா அனுமதிக்கவே கூடாது. அது நாகரிக அரசியல் அல்ல என்பதோடு நாளடைவில் இந்தியாவுக்கே ஆபத்தாக முடியும்! போராளிகள் இங்கே வந்த பிறகு இந்தியக் குடிமகனுக்கு இல்லாத விசேஷ உரிமைகளை அவர்களே எடுத்துக் கொள்ள அரசு ஏன் அனுமதிக்க வேண்டும்? தற்காப்புக்கு ஒரு கைத்துப்பாக்கி வைத்துக் கொள்வதானால் கூட இந்தியக் குடிமகன் அதற்கான லைசென்ஸ் பெறவேண்டும். அவ்வாறிருக்க, ஈழப்போராளிகள் ஏராளமான தானியங்குத் துப்பாக்கிகளையும் தோட்டாக்களையும் தங்கள் வீடுகளில் குவித்துக் கொள்ள ஏன் அனுமதிக்கப்பட வேண்டும்?

சூளைமேட்டில் அராஜகம் நிகழ்ந்த அதே தீபாவளியன்று தஞ்சை ஒரத்தநாட்டிலும் போராளிகள் அத்துமீறி நடந்து கொண்டிருக்கிறார்கள். அதற்கு முன்பு மீனம்பாக்கம் விமான நிலையத்தில் குண்டு வைத்ததின் விளைவாக முப்பது பேர் மரணம். வேதாரண்யத்தில் நடந்த மோதல்களின் வேதனை இன்னும் மறையவில்லை. சாலிக்கிராமம் துப்பாக்கிப் பிரயோகம் நினைவில் பசுமையாக இருக்கிறது. இன்னும் எத்தனை நிரூபணங்கள் வேண்டும்?

தும்பை இழுத்துப் பிடிக்காமல் தாமதித்து வந்ததற்கு தி.மு.க.— அ.தி.மு.க. போட்டி அரசியலும் ஒரு காரணம். தமிழக மக்களின் பாதுகாப்புக்காக இல்லாவிட்டாலும் பெங்களூரில் கூடுகிற தெற்கு ஆசியத் தலைவர்களின் பாதுகாப்புக் கருதியேனும் இப்போது நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள். இதனால் ஜெயவர்த்தன கை பலப்பட்டு விடும் என்றால் அந்த அளவுக்கு பலவீனத்தை ஈழப்போராளிகள் தாங்களே தேடிக் கொண்டவர்களாகிறார்கள்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

டாக்டர் பி. ராமமூர்த்தி பேட்டி:

# மூளைக் காய்ச்சலை ஒழிக்கவே முடியாதா?



• டாக்டர் பி. ராமமூர்த்தி

சில வாரங்களாக நாளிதழ் செய்திகள் மூலம் பரபரப்பையும் பீதியையும் உண்டாக்கி வரும் நோய் மூளைக் காய்ச்சல். இது எங்கிருந்து எப்படி வருகிறது? நிஜமாகவே இதற்கு இவ்வளவு தூரம் பயப்பட வேண்டியதுதானு? இந்த நோயிலிருந்து தப்பிக்க வழியே இல்லையா? மருந்துகள் கிடையாதா?

ஆறு ஆண்டுகளுக்கு முன்னுல் அஸ்ஸாம், உ.பி., மேற்கு வங்காளம், மத்தியப் பிரதேசம்... என்று சுற்றி வளைத்து இந்த மூளைக் காய்ச்சல் பரவி, 1300 பேர் வரை பலி வாங்கியது.

இப்போது மீண்டும் ஒரு தாக்குதல். அண்டை மாநிலமான ஆந்திரம் நன்ருக அகப்பட்டுக் கொண்டிருக்கிறது. கர்நாடகத்திலும் தமிழகத்திலும் பரவி வருகிறது. இருநூறு குழந்தைகள்வரை மரணமடைந்துள்ளன. நோய் பரப்புகிற கிருமிகளை உற்பத்தி செய்கின்றன என்று பன்றிகள் வேட்டையாடப்படுகின்றன. கொசுக்கள் மீது குற்றம் சாட்டப்படுகிறது

-அரசாங்கம் . ழிக்கிறது. மருத்துவத் துறை திணறுகிறது. ஹோமியோபதியா, அலோபதியா என்று பட்டிமன்றம் நடக்கிறது. உ.பி.யில் 650 மரணங்கள்.

**நரம்பியல் நிபுணர் டாக்டர் பி. ராமமூர்த்தி அவர்களை அணுகி விவரம் கேட்டோம். பாதி பரிவும், பாதி ஆத்திரமும் கலந்து அவருடைய பதில்களைப் பெற முடிந்தது.**

''நான் இளைஞனுக இருந்தபோது மிஸ். மேயோ எழுதினுர்: 'இந்தியா ஒரு பிரும்மாண்டமான கழிப்பறை' (**India is a vast La trine**) என்று. அப்போது இந்தக் குற்றச்சாட்டு விமர்சனம் என்போன்ற இளைஞர்களுக்கு ஆத்திரம் ஊட்டியது. அப்போது சுதந்திரப் போராட்டம் தீவிரமாக இருந்தது. மிஸ் மேயோ எழுதியது நமது தன்மான



• பன்றிகள்...

உணர்வை உசுப்பிவிட்டது. அதனுல் அந்த அம்மையார் மீது வெறுப்படைந்தோம். ஆனுல் இப்போது சுதந்திர இந்தியாவில் உணர்ச்சிவசப்படாமல் யதார்த்த நோக்கிலும் அறிவு பூர்வமாகவும் பார்க்கும்போது என்ன நிலவரம்? அவர்கள் அன்று சொன்னதைவிட இப்போது பல மடங்கு அசுத்தம் இருக்கிறது. குடிநீர் எது கழிவு நீர் எது என்று தெரியாமல் இரண்டறக் கலந்து விடுகிற நிலை. போதிய அளவு கழிவறைகள் இல்லாததால் பாதையெல்லாம்—தெருவோரங்களில் எல்லாம் வெட்கத்தை விட்டு மனிதர்கள் பண்ணுகிற அசிங்கங்கள். இவ்வளவையும் குன்ருமல் குறையாமல் வளர்த்துக் கொண்டிருக்கும் நிர்வாகம். எழுநூறு மில்லியன் ஏழைகளில் இருநூறு மில்லியன் ஏழைகள் செத்தால்தான் என்ன என்கிற மாதிரி பொறுப்பற்ற போக்கு எல்லா மட்டத்திலும்

பரவிவிட்டது.

''மஞ்சள் காமாலே, வயிற்றுக்கடுப்பு என்று ஆயிரக்கணக்கில் ஏழைகள் செத்துக் கொண்டுதானே இருக்கிறார்கள்? ஏதோ இந்த 'என் ஸெபலைடிஸ்' வந்து நூறு பேர் செத்தால் பரபரப்பு அடைகிறார்கள்; பத்திரிகைகளில் எழுதுகிறீர்கள். எல்லாவற்றுக்கும் அடிப்படை, சுத்தம் சுகாதாரக் குறைவு தான். அதை யார் கவனிக்கிறார்கள்? சுத்தமாக இரு என்று சொன்னால் யார் கேட்கிறார்கள்? நோய் வந்து நூற்றுக் கணக்கில் செத்து விழுகிறபோது டாக்டர்களைக் குறை கூறுகிறார்கள். தடுப்பு ஊசிக்கு ஆலாய்ப் பறக்கிறார்கள்.

''வேகாத அரிசியைத் தின்றுவிட்டு வயிற்று நோவு என்று டாக்டரிடம் போய் முறையிடுவதில் என்ன புத்திசாலித்தனம் இருக்கிறது?

''சுற்றுப்புறத் தூய்மை, சுத்தம், சுகாதாரம் என்கிற உணர்வுகள் இல்லாத ஜனங்கள் நோய் வந்து சாக வேண்டியதுதான். டாக்டர்கள் நோயாளிக்குத்தான் மருந்து தர முடியும். எல்லா மக்களுக்கும் சுத்தம் சுகாதாரம் இவற்றைச் சொல்லித் தர டாக்டர்களால் முடியாது. இவற்றைப் பாடத் திட்டங்களில் சேர்த்து குழந்தைப் பருவத்திலேயே நன்றாக மனத்தில் பதிய வைக்க வேண்டும். சுத்தம், சுகாதாரம் பற்றிய அறிவு மட்டும் மக்களுக்குப் படிப்படியாக உருவானால் போதாது. அவற்றைக் கடைப்பிடிக்க அவர்களுக்கு வசதிகள் இருக்க வேண்டும். குடிசை போட்டுக் கொள்ளவே வசதியில்லாத ஏழை கழிப்பறையை எப்படிக் கட்டிக் கொள்வான்? ஆகவே அரசாங்கம்தான் இதையெல்லாம் செய்து தர வேண்டும். ஆனால் அரசோ, கிராமங்களுக்கு குடி தண்ணீர் வசதியையே இன்னும் சரியாகச் செய்து தர முடியாமல் திணறிக் கொண்டிருக்கிறது. ஆக, இதில் இரண்டு அம்சங்கள் உள்ளன: கல்வி, அதனுடன் இணைந்த சுகாதார அறிவு; இரண்டாவது, பொருளாதார மேம்பாடு.

''கவனியுங்கள், இந்த மூளைக் காய்ச்சலால் சாகிறவர்கள் பெரும்பாலும் ஏழைகளாகவே இருக்கிறார்கள். அரசியல்வாதிகள், பணக்காரர்கள், அரசாங்க உத்தியோகஸ்தர்கள் — இவர்களெல்லாம் இந்த நோய்களின் அரக்கப் பிடியில் மாட்ட வேண்டிய அவசியம் இல்லை. போதுமான பாதுகாப்பு அவர்களுக்குக் கிடைத்து விடுகிறது. ஏழைகளைப் பற்றி இங்கே யார் கவலைப்படுகிறார்கள்?''

ஒரே மூச்சாகக் கொட்டித் தீர்த்தார் டாக்டர். அவருடைய ஒவ்வொரு சொல்லிலும் இருந்த நியாயம் நம்மைக் காயப்படுத்தியது. இந்த ஜனங்களிடம் சுத்தம், சுகாதாரம் இவற்றைப் பற்றிய அடிப்படை அறிவைப் பரப்புவதை விட்டுவிட்டுக் கொடிபிடித்துக் கோஷம் போடுகிற அரசியல் அறிவை மட்டும் தானே பொறுப்பில் உள்ள பலரும் வளர்த்திருக்கிறார்கள்?

''கடந்த முப்பத்தாறு வருஷங்களாக இந்த மூளைக் காய்ச்சல் நோயைப் பார்த்து வருகிறேன். இப்போது ஹோமியோபதி மருந்து குணப்படுத்தும் என்று சொல்கிறார்கள். அப்படி ஒரு நோயாளியையாவது ஹோமியோபதி மருந்து குணப்படுத்தியது என்று நிரூபித்துக் காட்டட்டும். அப்படி ஆராய்ச்சி பூர்வமாக நிரூபித்துக் காட்டுவார்களானால் அவர்கள் நோபல் பரிசே பெறத் தகுதியுடையவர் ஆவார்கள்'' என்கிறார் டாக்டர்.

அப்பாவித்தனமாகப் பன்றிகளை வேட்டையாடுகிறார்கள். பன்றிகள் மட்டும் தானா? அசுத்தப் பொருள்களைப் பரப்புகிற எந்தப் பறவை மூலமும், கோழி, கரப்பான் பூச்சி போன்றவற்றின் மூலமும்கூட இந்த நோய்க் கிருமிகள் பரவக் கூடும்.

ஜப்பானில் டாக்டர் ஒருவர் கண்டுபிடித்ததால் இந்த நோய்க் கிருமிக்கு 'ஜப்பானீஸ்—பி' என்று பெயர் வந்தது. மற்றபடி ஜப்பான் நாட்டுக்கும் இந்த நோய்க்கும் தொடர்பு ஏதும் கிடையாது.

நோய் முதலில் பன்றி போன்ற அசுத்தம் பரப்பும் பிராணி அல்லது பறவைகளின் இரத்தத்தில் உருவாகிறது. அந்த இரத்தத்தை உறிஞ்சுகிற கொசு, மனிதனைக் கடிக்கிறபோது, வைரஸ் கிருமி மனிதனைத் தொற்றிக் கொள்கிறது. எனவே அரசு கொசு ஒழிப்பதில் வெற்றி பெற்றாலே மூளைக் காய்ச்சல் மட்டுமல்ல, வேறு எத்தனையோ நோய்களையும் கூடவே ஒழித்துக் கட்டிவிடலாம்.

குறிப்பாக ஏழு எட்டு வயதுள்ள குழந்தைகளையே இந்நோய் தாக்குகிறது. ஆனால்



.... கோழிகள் மூலம்கூட இந்தக் கிருமிகள் பரவலாம்.

அதிர்ஷ்டவசமாக முக்கால்வாசிப் பேருக்கு நோய்த் தடுப்புத். திறன் (இம்யூனிடி) இயற்கையிலேயே அமைந்திருக்கிறது. அவர்களை இந்த நோய் பாதிப்பதில்லை.

மூளையில் உள்ள நியூரான் என்கிற நரம்பு அணுக்களில் இந்த நோய்க்கான வைரஸ் கிருமிகள் இடம் பிடித்துக் கொள்கின்றன. நோய்ப் பாதிப்பு ஏற்படுகிற இடங்களில், மூளை செல்கள் சேதம் அடைகின்றன. நரம்பு செல்களையே தின்றுவிடுகிற கொடூரமான வைரஸ் இது. பாதி அளவு செல்கள் பாதிக்கப்பட்டால்கூடப் போதும். அறிவு மந்தமடையும். வாத நோய் ஏற்படலாம். கண் பார்வைகூடப்'பாதிக்கப்படலாம்.

போலியோ என்கிற இளம்பிள்ளை வாதம் கூட வைரஸ் கிருமியால்தான் ஏற்படுகிறது. ஆனால் போலியோ நோய்க்கு ஒரேவிதமான வைரஸ்தான் காரணம். ஆனால் மூளைக் காய்ச்சலுக்கு பலவிதமான வைரஸ் கிருமிகள் காரணமாகின்றன. ஒவ்வொரு கிருமிக்கும் ஒவ்வொருவிதமான தடுப்பு மருந்து கண்டாக வேண்டிய 'கட்டாயம் ஏற்படுகிறது. இந்த வைரஸ் வகைகளில் ஒன்றுதான் 'ஜப்பானிய—பி' வைரஸ்.

தடுப்பு ஊசி போடுவது என்று தொடங்கினால் அவ்வளவு பேருக்கும் எழுபது கோடி மக்களுக்கும் போட்டாக வேண்டும். இது நடக்கிற காரியமில்லை. அரசாங்க கஜானா அப்படியே காலியாக வேண்டியதுதான். தவிரவும் இயற்கையிலேயே நோய்த் தடுப்பு சக்தி உள்ள குழந்தைகளுக்கு இந்தத் தடுப்பு ஊசியைப் போட்டால் விபரீத பின் விளைவுகள் ஏற்படக் கூடும். எனவே ஒவ்வொருவரையும் கவனமாகப் பரிசோதித்துப் பார்த்து பிறகுதான் தடுப்பு ஊசி போட வேண்டும்.

ஒரே குடும்பத்தில் ஒரு குழந்தைக்கு நோய் கண்டால் இன்னொரு குழந்தைக்கு வர வேண்டும் என்கிற அவசியம் இல்லை. அந்த அளவு இது தொற்று நோய் அல்ல என்பது சற்று நிம்மதி தரக் கூடிய செய்தி.

''அடிப்படைச் சுகாதாரம் மட்டுமில்லை. போஷாக்குக் குறைவும் ஒரு முக்கியமான காரணம். நாற்பது சதவிதம் பேருக்கு மேல் இங்கே ஊட்டச் சத்துப் பற்றாக் குறை இருக்கிறது. இவர்களுக்கெல்லாம், எந்த நோயானாலும், தடுப்புத் திறன் இருக்க வாய்ப்பே இல்லை'' என்கிறார் டாக்டர். இவர்களுக்குப் பொருளாதார மேம்பாடுதான் உதவ முடியும்.

மூளைக் காய்ச்சல் என்கிற இந்த நோய் ஐரோப்பாவிலும் கொடி கட்டிப் பறந்த காலம் ஒன்று உண்டு. இப்போது அறவே ஒழித்துவிட்டார்கள். பொருளாதார மேம்பாடும் அடிப்படைச் சுகாதார அறிவும் வளர வளர இதுபோன்ற நோய்கள் செல்வாக்கு இழந்துவிடுகின்ற நிலை ஏற்படுகிறது.

பேட்டிக் கட்டுரை: **யெஸ்பால்**

---



# ஒரு பக்கம் அனுமதி; மறு பக்கம் ஆர்ஜிதம்!

**நீ**ங்கள் ஓர் இடத்தை வாங்கி அதில் வீட்டையும் கட்டிக் குடியேறும் சமயத்தில் அந்த இடத்தை ஹவுஸிங் போர்டு எடுத்துக் கொள்ளப் போவதாகத் தகவல் வந்தால் எப்படியிருக்கும்? கோயம்புத்தூரிலிருந்து மருதமலை போகிற வழியில் உள்ள வடவள்ளி கிராமத்தையொட்டி, உருவாகிவரும் சூப்பர்கார்டன் அவின்யூக் காரர்களுக்கு இப்படியொரு பிரச்னை.

வடவள்ளி கிராமத்தை ஒட்டின 4.035 ஏக்கரைச் சிறு காலனி மாதிரி முப்பத்தெட்டுவீடுகளுக்கான பிளானோடுதிட்டம் போட்டு பிளான் (C.No. 2277/82 CNR 4) 83ல் அனுமதிக்கப்பட்டும் விட்டது. குழந்தைகள் விளையாட, கடைகள் வைக்க என்று தனித்தனியாக நிலம் ஒதுக்கியாகி விட்டது. நிலத்தை விற்றவரான அஷ்ரபேகமே அந்த சூப்பர் கார்டன் அவின்யூவில் முதல் வீட்டையும் கட்டிவிட்டார். அடுத்தடுத்து மூன்று பேர் வீடுகளையும் கட்டிவிட்டார்கள்.

'பிளாட்'களை வாங்கியவர்கள் அனேகம் பேர் பாங்க் ஊழியர்கள் என்பதால், கடன் வாங்கிச் சிரமப்பட்டுக் கட்டி முடித்துக் குடியேறும்முன்பு, திடுதிப்பென்று ஹவுஸிங் போர்டிலிருந்து ஓர் ஆர்டர். (G.O. M.S. 231/85) ஏறத்தாழ நாற்பத்தெட்டு ஏக்கர்களை ஆர்ஜிதம் செய்து கொள்ளப் போவதாகத் தகவல் வர வாங்கின பலருக்கும் ஷாக். உடனே ஹைகோர்ட்டுக்குப் போய் ஸ்டே ஆர்டரும் வாங்கி வைத்திருக்கிறார்கள்.

ஹவுஸிங் போர்டு ஆர்ஜிதம் செய்வதாகத் தெரிவித்திருக்கின்ற இடத்தில் TWAD போர்டு ஆபீஸும், ஒரு கோவிலும் கூட இருக்கின்றன. பலபேரைச் சிக்கலில் ஆழ்த்திவிட்டு, ஹவுஸிங் போர்டு இப்படியொரு ஆர்ஜித நோட்டீஸ் அனுப்ப வேண்டிய அவசியம் என்ன? அனுமதித்த இடத்தில் ஏன் இத்தனை குளறுபடி?

— யூகி



குடிதண்ணீருக்குப் பஞ்சமேயில்லை!



பாலகிருஷ்ணன்

# பாராட்டுப் பெறும் ஒரு பஞ்சாயத்துத் தலைவர்!

“எங்கள் ஊருக்கு வந்து பாருங்கள். குடி தண்ணீருக்காக நாங்கள் அலையும் அலைச்சலைக் கண்டால் நீங்கள் ரத்தக் கண்ணீர் வடிப்பீர்கள்.....'' என்றுதான் இது வரை நமக்குப் பல கிராமங்களிலிருந்தும் கடிதங்கள் வந்திருக்கின்றன. இந்த நிலையில் கோவை மாவட்டத்திலுள்ள தொண்டாமுத்தூர் யூனியன் — நரசீபுரம் கிராமத்திலிருந்து மட்டும், ''எங்கள் கிராமத்தில் குடி தண்ணீர்ப் பஞ்சமே கிடையாது. புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்துத் தலைவர் பாலகிருஷ்ணன் ஏகப்பட்ட குழாய்களைப் போட்டு, எங்களுக்குத் தாராளமாகச் சிறுவாணித் தண்ணீர் கிடைக்க ஏற்பாடு செய்துள்ளார்'' என்று ஒரு கடிதம் வந்தது. ஆச்சரியம் தாங்காமல் அந்த கிராமத்திற்குச் சென்றோம்.

வீதிக்கு வீதி — மூலைக்கு மூலை — எங்கு பார்த்தாலும் இரட்டை இரட்டையாகக் குடி தண்ணீர்ப் பைப்புகள். திறந்தால் பீய்த்துக் கொண்டு வரும் சிறுவாணித் தண்ணீர். கூடவே, தினமும் டாக்டர் வந்து போகும் மருந்தகம்! உண்மையிலேயே நாங்கள் காண்பது நிஜம்தானா அல்லது ஒருவேளை வேறு தேசத்திலுள்ள கிராமம் ஒன்றுக்குச் சென்று விட்டோமா என்று எங்களுக்கே சந்தேகம் வந்துவிட்டது. ''ஏனுங்க... ஆரைப் பாக்க வந்திருக்கீங்க?'' என்று கொஞ்சி வரும் கொங்குத் தமிழைக் கேட்டபோதுதான் கோவை மாவட்டத்தில் இருக்கிறோம் என்பதையே நம்ப முடிந்தது.

''உங்க பஞ்சாயத்துத் தலைவர் பாலகிருஷ்ணனைத்தான் பார்க்க வந்திருக்கோம்!''

''அவனுங்களா? ஆபீஸ் ரூம்லதான் இருந்தா இருப்பானுங்க.... டேய், பையா.... சாருங்களைக் கூட்டிக்கிட்டுப் போய்க் காட்டு....'' என்று வழி காட்டினார் ஒரு பெரியவர்.

பள்ளிக்கூடப் பொடியன் ஒருவன் முன்னால் நடக்க பஞ்சாயத்து அலுவலகத்திற்குச் சென்றோம். எங்கும் இல்லாத முறையில் இங்கு அவரிடம் கைகொடுத்துப் பாராட்டினோம். பேசினோம்.

''சபாஷ் மிஸ்டர் பாலகிருஷ்ணன். உங்கள் ஊர்த் தண்ணீர்ப் பிரச்னையைத் தீர்த்து வைத்துவிட்டீர்கள். தலைவரான உடனே எப்படி உங்களால் இந்தச் சாதனையைச் செய்ய முடிந்தது?''

''அது என்னங்க பெரிய விஷயம்? எங்க தொண்டாமுத்தூர் யூனியன்லே இரண்டாயிரம் அடி நீளத்துக்கு இரண்டரை அங்குலக் குழாய்ங்க சும்மா கிடந்துச்சுங்க. எங்க பஞ்சாயத்துக்குத் தாங்கன்னு தலைவர்கிட்டே கேட்டேனுங்க. அவரும் எடுத்துக்கிட்டுப் போன்னு சொல்லிட்டாருங்க. அது பத்தாதுங்களா.... வாரிக்கிட்டு - வந்துட்டேனுங்க....!''

''கொண்டு வந்த உடனேயே குழாய்களைப் பதித்து வேலையை முடிச்சுட்டீங்களா?''

''அதெப்படீங்க முடியும்? பஞ்சாயத்துல நிதி கிடையாதுங்களே. அதனால ஊர் ஜனங்களேதானுங்க குழி தோண்டி, பைப்பெல்லாம் புதைச்சாங்க. அதனால நீங்க என்னை மட்டும் பாராட்டக் கூடாதுங்க. எங்க கிராமத்துமக்களையும்சேர்த்துத்தானுங்கபாராட்டணும். அவங்க உதவியில்லேன்னா என்னால் இதைச் சாதிச்சிருக்கவே முடியாதுங்க!''

முப்பத்தைந்துவயதான பாலகிருஷ்ணன், பஞ்சாயத்துத் தேர்தலுக்கு முன்பு, ஊரில் அடங்காத பிள்ளையாகத்தான் வாழ்ந்து கொண்டிருந்தாராம். நிறையக் குடித்துக் கொண்டிருந்தாராம். அப்படியிருந்தும் ஊர் மக்கள் இவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்து விட்டதால், இப்போது குடிக்கு ஒரு முழுக்குப் போட்டுவிட்டதாகச் சொன்னார். தம் மீது ஊர் மக்கள் வைத்திருக்கும் நம்பிக்கையைக் கண்டிப்பாகக் காப்பாற்றிவிட முடியும் என்றும் அடித்துச் சொன்னார். மறுபடியும் வாழ்த்திவிட்டு மனம் நிறைந்த சந்தோஷத்தோடு விடை பெற்றுக் கொண்டு வந்தோம்.

— இல்லப்பா




என் நண்பன் கோபுவிற்கு ஒரு விபத்தில் கால் முறிந்து ஆஸ்பத்திரியில் சேர்த்திருந்தார்கள். அவன் படுத்துக் கொண்டிருக்கும் போது, படித்தபடி சிந்தனை செய்ய என்னிடமிருந்த 'பொன்மொழிகள்' என்ற புஸ்தகத்தைக் கொண்டு போனேன்.

ஆவலுடன் அதைக் கைநீட்டி வாங்கியவன் ஏதோ நெருப்பைத் தொட்டுவிட்டாற் போல் கீழே போட்டான்.

"இந்தப் புத்தகமா? எனக்கு வேண்டாம்!" என்றான்.

"இது சாதாரணப் புத்தகம் இல்லை. பெரிய பெரிய ஞானிகள், அறிவாளிகள் எப்போது எப்போதோ சொன்னதையெல்லாம் தொகுத்தது...."

"யாரோ ஒரு புத்திசாலி புத்தகமாகப் போட்டுக் காசாக்கி இருக்கிறான்!" என முடித்தான் கோபு.

"இருக்கட்டுமே! அவன் எடுத்துக் கொண்ட பிரயாசைக்கு ஒரு சன்மானம்."

"அப்பா ராகவா! என்னைச் சித்திரவதை செய்யாதே. இந்தப் 'பொன்மொழி' புத்தகம் தான் என்னை இந்தப் படுக்கையில் தள்ளியதே...."

"என்னடா பாவி சொல்கிறாய்?" என்று கேட்டு வைத்தேன்.

"அந்தப் புத்தகத்தை எடு. எட்டாம் பக்கத்தைப் பிரி. முதல் பொன்மொழியைப் படி...."

படித்தேன்.

"இது நம்மால் ஆகாத காரியம் என்று யோசிக்காதே. அதுதான் தாழ்வு மனப்பான்மைக்கு முதற்படி. அப்படி நினைப்பவன் எதையுமே சாதிக்க முடியாது — ஆமாம் இது சரியாகத்தானே இருக்கிறது?"

"அன்றைக்கு எனக்கும் இது சரியாகத் தான் பட்டது. அன்றைக்கு ஆபீஸிலிருந்து ஸ்கூட்டரில் திரும்பிக் கொண்டிருந்தேன். காலையில் படித்த இந்தப் பொன்மொழியைப் பற்றிய யோசனைதான். நான் எதற்குமே, சட்டென்று முடிவுக்குவரமாட்டேன். ஆயிரம் யோசனை செய்வேன். தெரு ஓரமாக ஒரு பெண் போய்க் கொண்டிருந்தாள். திடீரென்று ஒரு முரடன் அவளிடமிருந்த கைப்பையைப் பிடுங்கிக் கொண்டு ஓடினான்."

"அப்புறம்?"

"துணிந்துவிட்டேன். ஸ்கூட்டரின் வேகத்தை அதிகரித்து அவனைத் துரத்தினேன். பக்கத்தில் உள்ள தெருவிற்குள் புகுந்து அவன் ஓடினான். நானும் அசுர வேகத்தில் அந்தச் சந்தில் ஸ்கூட்டரைத் திருப்ப எதிரில் ஒரு பால் வண்டி. அடுத்த நிமிஷம் நான் பிளாட்பாரத்தில்.... அன்று மாலை முதல் இந்தப் படுக்கை வாசம்...."

"அடப்பாவமே.... திருவள்ளுவர் என்ன சொல்லியிருக்கிறார் தெரியுமா? எண்ணித் துணிக...."

"டேய் மறுபடி ஏதாவது பொன்மொழி உன் வாயிலிருந்து வந்தால் உன் குரல் வளையைப் பிடித்து...."

"ஸார்!" என ஒரு குயில் கூவியது.

ஒரு பெரியவர், கூட ஓர் இளம் பெண்... நிச்சயம் என் பெண்டாட்டியைவிட அழகு.

"பாவம் என் பெண்ணிற்காக நீங்கள் எடுத்துக் கொண்ட சிரமம்...." என்று பெரியவர் சொல்ல,

கோபு அந்தப் பெண்ணையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"நல்ல துணிச்சல் ஸார் உங்களுக்கு!" என அவர் பாராட்ட —

கோபு வைத்த கண்களைத் திருப்பி வாங்கவில்லை.

"அந்த ராஸ்கலைப் போலீஸில் பிடித்து விட்டார்கள்" என அவர் தகவல் சொல்ல...

கோபுவின் கண்கள் இமைக்கவேயில்லை...

எனக்குப் புரியவில்லை... என்ன ஆயிற்று இவனுக்கு?

பிறகு இரண்டு மாதங்கள் கழித்துப் புரிந்தது.

கோபுவிற்குக் கல்யாணம் — அந்தப் பெண்ணுடன்தான்!

என் மணப் பரிசு என்ன தெரியுமா?

அந்தப் 'பொன்மொழிகள்' புத்தகம் தான்.

ஜனனி




# பிலிப்ஸ்

## சென்ற ஆண்டு பிலிப்ஸ் வழங்கிய "முற்றிலும் புதியதை" விட வேறு சிறந்தது உண்டா?



**இந்த ஆண்டின்**
**மிக நவீனமானதை**
**வழங்குவதும் பிலிப்ஸ்**

மோனோ டூ-இன்-ஒன்கள் மற்றும் கேஸட் ரெக்கார்டர்களின்
அணிவரிசையை காணுங்கள்


AR 153 ரூ. 1195/-*


AR 243 ரூ. 1300/-*


AR 343 ரூ. 1450/-*


AR 151 ரூ. 995/-*


AR 143 ரூ. 1025/-*

AM 144 ரூ. 570/-*
AM 354 ரூ. 875/-*
AM 254 ரூ. 750/-*




AM 155 ரூ. 795/-*

CLARION/B/P/202/2603/R TAM

*எக்சைஸ் வரி உள்ளிட்டது. தல வரிகள் தனி. இந்த விலைகள் மாற்றத்திற்கு உட்பட்டவை. லைசென்ஸ் தேவை இல்லை.

**பிலிப்ஸ்–ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**



# "சர்வாதிகாரியா? நானா?"

—நெகமம் கந்தசாமியுடன் ஒரு சந்திப்பு

**''பொள்ளாச்சிக்கு அருகிலுள்ள நெகமம் என்ற ஊரில் அ.இ.அ.தி.மு.க. கொடியைத் தவிர, வேறு எந்தக் கட்சிக் கொடியும் பறந்துவிட முடியாது. எதிர்க் கட்சித் தலைவர்களின் படத்தைக்கூட ஒருவர் தமது வீட்டில் மாட்டி வைத்துக் கொள்ள முடியாது. மீறிச் செய்தால் அடி உதை தான்! அந்த அளவுக்கு ஒரு குட்டி சர்வாதிகார ஆட்சி நடத்திக் கொண்டிருக்கிறார், அந்தப் பகுதி எம்.எல்.ஏ.வான நெகமம் கந்தசாமி'' என்று பலரும், ''அவர் நல்லவனுக்கு நல்லவன்; கெட்டவனுக்குக் கெட்டவன்'' என்று சிலரும் நமக்குக் கடிதம் எழுதியிருந்தார்கள். அவருடன் ஒரு சந்திப்பு.......**

"ஒருபுறம் உங்களைச் சிலர் ஓஹோ என்று புகழ்கிறார்கள்..ஆனால் அதேசமயம் பலர் உங்களையொரு சர்வாதிகாரி என்று சொல்கிறார்களே.....?''

''அநியாயம் செய்பவர்கள் என்னை மிக மோசமானவன் என்று வர்ணிக்கத்தான் செய்வார்கள். என் கட்சிக்காரர்களாகவே இருந்தாலும் தவறு செய்தால் நான் பொறுத்துக் கொள்வதில்லை. அதனால் என் கட்சிக்காரர்களிலேயே சிலர் என்னை மோசமானவன் என்றுதான் சொல்வார்கள்.''

''எதிர்க் கட்சித்தலைவர்களின் படங்களைக் கூட ஒருவர் தமது வீட்டில் வைத்துக் கொள்ள முடியாது. மீறினால் அடி உதைதான் என்கிறார்களே.....?''

''என் தொகுதியிலுள்ள எந்தத் தோட்டத்திற்கும் வேலி போட வேண்டாம் என்று சொல்லியிருக்கிறேன். காரணம், திருட்டு என்ற பேச்சுக்கே இடமில்லை. என் தொகுதியில் கடனுள்ளவன் என்று எவனும் இல்லை. அப்படியிருந்தால் சொல்லுங்கள் நான் தூக்குப் போட்டுக் கொள்கிறேன்! என் தொகுதியில் ஒரு சதவிகிதம் பேர்கூட குடிக்க மாட்டார்கள். குடிக்க வேண்டாம் என்று பிரசாரம் செய்கிறேன். என் தொகுதியில் பதினைந்தாயிரம் பேருக்கு வேலை வாங்கித் தந்திருக்கிறேன். இப்படியிருக்கும்போது, என் தொகுதிக்குள் எதிர்க்கட்சித் தலைவர்களின் படங்களை ஒருவர் எதற்காக மாட்ட வேண்டும்? எம்.ஜி. ஆரை ஏற்றுக் கொள்வதில் என்ன தவறு?''

''அது ஒருவரின் தனிப்பட்ட விஷயம். நீங்கள் யாரையும் யாரிடமும் திணிப்பதற்கு முடியாது; கூடாது!''

''இருந்துவிட்டுப் போங்கள். நான் வேண்டாமென்று சொல்லவில்லையே!''

''அடி உதை என்று இறங்கி விடுகிறீர்களாமே?''

''இதோ என்னைச் சுற்றி இருப்பவர்களைப் பாருங்கள். இவர்கள் என் அடி ஆட்கள்தான். ஆனால் யாரிடமாவது ஆயுதம் ஏதும் இருக்கிறதா பாருங்கள். ஒருவனைப் பிடித்து வா என்றால் அப்படியே குண்டுக் கட்டாகக் கட்டித் தூக்கிக் கொண்டு வருவார்களே தவிர, ஒரு சிறு நகக் கீறல்கூடப் படாது. அந்த அளவுக்கு நல்லவர்கள். ஆனாலும் சில சமயங்களில் உணர்ச்சிவசப்பட்டு விடுவார்கள். அதுவும் கட்சி விஷயத்தில் ரொம்பவும்

உணர்ச்சிவசப்பட்டு விடுவார்கள். எதிர்க் கட்சித் தலைவர்களின் படங்களை ஒருவர் வைத்திருப்பதைக் கண்டால் இவர்களே ஏதாவது செய்துவிடுகிறார்கள். நான் சொன்னாலும்கூடக் கேட்பதில்லை. அதற்கு நான் என்ன செய்ய முடியும்?''

''எந்தவொரு விஷயத்திற்கும் பலாத்காரம் தீர்வாகிவிட முடியுமா என்ன?''

''வேறு என்ன செய்யச் சொல்கிறீர்கள். உதாரணத்திற்கு ஒன்று சொல்கிறேன். என் தொகுதியிலேயே இழவு வீட்டுக்குத் துக்கம் விசாரிக்கப் போன ஒருவன், அங்கிருந்த ஒரு வேலைக்காரப் பெண்ணைக் கற்பழித்து விட்டான். அந்தப் பெண் அவனைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்கிறாள். அவன் மறுக்கிறான். இதற்கு என்ன தீர்வு? நீங்கள் விஷயம் தெரிந்த பத்திரிகையாளராயிற்றே..... சொல்லுங்கள்!''

''அதற்குச் சட்டம் இருக்கிறது. நீதிமன்றம் இருக்கிறது.....''

''சட்டத்தின் துணை கொண்டு நீதி கிடைப்பது எப்போது? அவளுக்குக் குழந்தை பிறந்த பிறகா? அதனால்தான் இதற்கெல்லாம் நானே தீர்வு காண்கிறேன். இங்கே பலாத்காரம் தவறில்லை என்கிறேன். அடி உதை இல்லாவிட்டால் அவன் வழிக்கு வருவானா?''

''இதற்கெல்லாம் உங்களை எப்படி போலீஸார் அனுமதிக்கிறார்கள்?''

''அவர்கள் என்ன அனுமதி கொடுப்பது? அவர்களைப் பற்றி எனக்குத் தெரியாதா? விபசாரக் குற்றத்திற்காக ஒரு பெண்ணைக் கைது செய்தால் அவளை இவர்கள் என்ன செய்து அனுப்புகிறார்கள் என்று எனக்குத் தெரியாதா? என் விஷயத்தில் அவர்கள் தலையிட்டால், நானே ஒரு பெண்ணை 'செட் அப்' செய்து, 'இந்த இன்ஸ்பெக்டர் என்னைக் கைப்பிடித்து இழுத்தார்' என்று சொல்லச் செய்து அவர்கள் மேலேயே கேஸ் போடச் செய்வேன். அதனால் என் விஷயத்திற்கே அவர்கள் வரமாட்டார்கள்!''

''அதற்காகச் சட்டத்தை நீங்களே கையில் எடுத்துக் கொள்வதா?''

''வேறு வழியில்லை. நமது அதிகாரிகள் சோம்பேறிகள். கிராமத்திலிருக்கும் ஒருவன் மிகவும் கஷ்டப்பட்டு பஸ் சார்ஜுக்கு மட்டும் எப்படியோ பணம் புரட்டிக் கொண்டு போனால், ''நாளைக்கு வா!'' என்று நமது அதிகாரிகள் கொஞ்சம்கூட அக்கறையில்லாமல் சொல்கிறார்கள். அடுத்த நான் போக அவன் பஸ் சார்ஜுக்கு என்ன செய்வான்? அங்குதான் நான் போகிறேன். அவன் பிரச்னைக்குத் தீர்வு காண்கிறேன். 'இன்று போய் நாளை வா!' என்கிற பிசினெஸ்லலாம் என்னிடம் கிடையாது. உடனடி தீர்வுதான்!''

''நீங்கள் முன்பு சொன்னீர்கள்; குடிக்க வேண்டாமென்று நீங்களே பிரசாரம் செய்வதாக! ஆனால் உங்கள் கட்சி அரசுதானே கடைகளையே திறந்து வைத்திருக்கிறது! இது முரண்பாடாக இல்லையா?''

''அத்தனை ஏன்? நானே மூன்று சாராயக் கடைகளை ஏலம் எடுத்திருக்கிறேன். எதற்காக? நியாயமான விலையில் கள், சாராயம் கொடுப்பதற்காக! என் கடைகள் இல்லாவிட்டால் பக்கத்திலுள்ள கடைக்காரர்கள் தங்களிஷ்டத்திற்கு விலை வைத்து விற்பனை செய்வார்கள். நான் இருப்பதால்தான் அனைவரும் நியாயமான விலைக்கே விற்கிறார்கள்!''

''எதிர்க்கட்சி வேட்பாளர்கள் உங்கள் பகுதிக்குள் நுழைந்து வோட்டு கேட்கக் கூட நீங்கள் அனுமதிப்பதில்லையாமே? அடித்து விரட்டி விடுகிறீர்களாமே?''

''உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? என் தொகுதியிலுள்ள இருநூற்று நாற்பது ஊர்களில் எட்டு ஊர்களுக்குள் இன்றைக்கும் நான் நுழைய முடியாது. அடித்து விரட்டி விடுவார்கள்! அப்படியிருக்கும்போது நான் மட்டும் அவர்களை எப்படி அனுமதிக்க முடியும்?''

''கடந்த பொதுத் தேர்தலின்போதுகூட உங்களை எதிர்த்துப் போட்டியிட்ட தி.மு.க. வேட்பாளரை நீங்கள் கடத்திக் கொண்டு போய்விட்டீர்களாமே?''

''அது சுத்தப் பொய்!''

''அந்தச் சமயத்தில் டி. ராஜேந்தர் பேச விருந்த பொதுக்கூட்டத்தைக்கூட நீங்கள் கலாட்டா செய்து கலைத்திருக்கிறீர்கள்!''

''நான் ஒன்றுமே செய்யவில்லை. என் ஆட்கள் அதையெல்லாம் அனுமதிக்கவில்லை. அவ்வளவுதான்.

''நீங்கள் ஆர்.எம். வீரப்பன் கோஷ்டியைச் சேர்ந்தவர். அதற்கு என்ன காரணம்?''

''நியாயத்தின் பக்கம்தானே நான் இருக்க முடியும்!''

''இரண்டு கோஷ்டிகள் இருப்பது நல்லதுதானா?''

''நல்லதில்லைதான். என்ன செய்வது? 'லஞ்சம் வாங்குங்கள். ஆனால் அதை இரண்டு கைகளாலும் வாங்காதீர்கள். ஒரு கையால் வாங்குங்கள், போதும்!' என்று சொல்கிறேன். அவர்கள் கேட்க மாட்டேன் என்கிறார்கள். அப்புறம் அவர்களை எப்படி ஆதரிக்க முடியும்?''

''அப்படியானால் நீங்கள் ஒரு கையால் வாங்குகிறீர்களா?''

''கேட்டுப் பாருங்கள். நான் யாரிடமாவது வாங்கியிருக்கிறேனா என்று! நான் சுத்தமானவன். அதனால்தான் நான் நின்றால் பொதுக் கூட்டம்; நடந்தால் ஊர்வலம் என்னும் அளவுக்கு என்னோடு எப்போதும் ஆட்கள் இருந்து கொண்டே இருக்கிறார்கள். அதோடு நான் நியாயத்தையும், திறமையையும் எங்கிருந்தாலும் மதிப்பவன். நல்லவனுக்கு நல்லவன்; கெட்டவனுக்குத்தான் நான் கெட்டவன்!''

சந்திப்பு: **இளங்கோவன்**

# உனக்காக ஒரு பொய்



**போட்டிக் கதை — 10**

அலுவலகத்தில் பணிபுரியும் மனித இயந்திரங்கள் அவசரமாய் வீடு திரும்பும் அசதியான மாலை வேளை!

ஐப்பசி மாதப் பனியிடம் தோற்றுப் போயிருந்தான் மாலைக் கதிரவன்.

செம்பகௌடா ரோட்டில் வாகனப் போக்குவரத்தும் ஜன நெரிசலும் அதிகமாக இருந்தது. பிரபாத் தியேட்டர் பேனரில் ராஜ் குமார் பெரிதாய்ச் சிரித்துக் கொண்டிருந்தார். மைசூர் பேங்கிற்கு எதிரே பச்சை வாழைகளைக் கையில் ஏந்திக் கொண்டு, 'இப்பத்—திப்பத், இப்பத்—திப்பத்' என்று கூச்சலிட்டுக் கொண்டிருந்தான் வியாபாரி. நாற்சந்தி கோவில் மணி கணீரென ஒலித்தது.

யோசனையோடு நடந்தான் நரேந்திரன்.

காவிரி பில்டிங்ஸின் ஏழாவது ஃப்ளோரில் இருந்தது ராம் எக்ஸ்போர்ட்ஸ். வரிசையாய் இருந்த ஆபீஸர்கள் சேம்பர்களின் கதவில் ஒட்டிக் கொண்டிருந்த பெயர்ப் பலகைகளைப் பார்த்தவாறு மெல்ல நகர்ந்தான். மூன்றாவது அறையின் கதவு 'நளினி, அட்மினிஸ்ட்ரேடிவ் ஆபீஸர்' என்றது.

சில கணங்கள் தயங்கினான். பிறகு கதவை சற்றுத் தள்ளி, 'மே ஐ கம் இன்' என்றான்.

''எஸ்'' என்றது இனிமையான குரல்.

எதிர்பார்க்கவில்லை என்று அவள் பார்வை சொன்னது. அனிச்சையாய் அவள் பார்வை நரேந்திரனின் வலது கையை ஆராய்ந்தது.

உத்தரவின்றி அமர்ந்தான்.

ஆள்காட்டி விரலால் டேபிளை சுட்டிக் காட்டி, ''திஸ் ஈஸ் ஆபீஸ்'' என்றாள்.

''முடியற நேரத்துலதான் வந்திருக்கேன்.''

''எதற்கு வந்தீங்க?''

''எதிர்பார்த்த கேள்விதான்'' புன்னகை செய்தபடி மூக்கை வருடிக் கொண்டான். பிறகு, ''அம்மாதான் அனுப்பினாங்க'' என்றான்.

அவனைப் பார்க்க விரும்பாதவள் போல முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

சில கணங்கள் அமைதி நிலவியது.

என்ன நினைத்தாளோ! மெல்ல எழுந்து வெளியே சென்றாள். திரும்பி வந்தபோது, 'டச்—அப்' செய்து பளிச்சென்றிருந்தாள்.

மௌனமாய் அருகருகே நடந்தார்கள்.

நரேனுக்குச் சுகமாய் இருந்தது. தென்றலாய்த் தவழ்ந்த காற்றை அதிகமாய் இழுத்து, 'புஸ்' என்று பெருமூச்சுவிட்டான். மெள்ளத் திரும்பி எழிலோவியமென நடக்



கும் நளினியைக் கண்ணியமாய் ரசித்தான்; பூரித்தான். ''இன்னிக்குத்தான் நாம ரெண்டு பேரும் முதல் முறையா வெளியே வந்திருக்கோம்!'' என்றான் மலர்ச்சியோடு.

அவள் மௌனித்தாள்.

''எனக்குச் சந்தோஷமா இருக்கு. ஆனால் உனக்குச் சங்கடமாயும் குழப்பமாயும் இருக்கும்னு தோன்றது. ஐ'ம் வெரி சாரி!''

''பரவாயில்லே.''

விஷ்ணு பவனில் நுழைந்தார்கள். மௌனமாய்க் காப்பி பருகினார்கள். சர்வர் பில் கொண்டு வந்தபோது, அவள் பர்ஸைத் திறந்தாள். ''நான் கொடுக்கறேன்'' என்றான்.

வெளியே வந்தபோது மெர்க்குரி விளக்கொளிக்கும் இருளிற்கும் இடையே மௌன யுத்தம் ஆரம்பமாகியிருந்தது. அவள் அருகில் இருந்ததாலோ என்னவோ, அந்தச் சூழ்நிலை அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது.

டிம் லைட்டோடு செல்லும் வாகனங்களையும், அங்காடிகளை அலங்கரிக்கும் வண்ண விளக்குகளையும், தியேட்டர் பேனர்களையும், ஊன்றிக் கவனித்து ரசித்தான். அவள் அழகாய் இருந்ததாலோ என்னவோ, ஒவ்வொன்றிலும் ஒருவித அழகைக் கண்டான்.

ஒருகணம் அவள் முகத்தைப் பார்த்தவன், 'காலமெல்லாம். நீயும் நானும் அருகருகே இப்படி நடந்துகிட்டே இருந்துட்டாக்கூடப் போதும்னு தோன்றது'' என்றான் மெலிதான குரலில்.

சட்டென நின்று முறைத்தாள். ''வள வளன்னு பேசாம வர்றீங்களா!''

அவன் முகம் குப்பென இருண்டுவிட்டது. மெஜஸ்டிக் சாக்கில் நெருங்கியபோது, ''ஒரு நிமிஷம்!'' என்று கூறிவிட்டு இடதுபுறம் இருந்த ஆர்யபவனை நோக்கி ஓடினான்.

திரும்பி வந்தபோது அவன் கையில் ஸ்வீட் பாக்கெட்.

பஸ் நிறுத்தம் வந்தது.

''வீடு வரை வரட்டுமா?'' தயங்கித் தயங்கி வினவினான்.

''எதற்கு?'' கணீரென்று அவள் கேட்க,

''வரணும் போலிருக்கு'' பார்வையைத் தாழ்த்தி பதில் சொன்னான்.

பால் பகுதி மாற்றாமல் அமர்ந்தார்கள். இரண்டு டிக்கெட் வாங்கிவிட்டு அவன் பக்கம் திரும்பி, ''வாங்கிட்டேன்'' என்றான்.

பஸ் ஓடிக் கொண்டிருந்தது. வேதனையோடு வெளியே வெறித்து நோக்கினான். 'இன்னும் சில நிமிடங்களில் இவளைப் பிரியப் போகிறேன்' என்று நினைக்கையில்

மா. தமிழ்மணி

## கல்கி
## கோகுலம்
## மங்கையர் மலர்

ஆசிரியர் குழுவினர் மட்டும் புதிய முகவரியில் செயல்படுகின்றனர்:

28, ஐந்தாவது தெரு,
ஏரி வட்டம், நுங்கம்பாக்கம்,
சென்னை—600 034.
போன்: 4 7 3 3 8 9

மற்ற பிரிவினர் வழக்கம்போல்,

ரேஸ்கோர்ஸ் சாலை,
கிண்டி, சென்னை—600 032.

என்ற முகவரியிலேயே செயல்படுகின்றனர்.

போன்: நிர்வாகம்: 4 3 15 4 3
சர்க்குலேஷன்
விளம்பரம்: 4 3 4 1 5 7
அச்சகம்: 4 3 4 1 9 0

உலகமே அந்நியமாகிவிட்ட பயம்! கண்கள் கலங்கிவிடும் போலிருந்தது.

'ஹோட்டல் ஷியாம் பிரகாஷ்' என்ற சிவப்பு போர்ட் கண்களைக் கவர்ந்தபோது தான் இறங்க வேண்டிய ஸ்டாப்பைக் கடந்து வந்துவிட்டதை உணர்ந்தான். பெண்கள் இருக்கையைப் பார்த்தான். அவள் இறங்கியிருந்தாள். சிக்னலுக்காக நின்ற வண்டியில் இருந்து இறங்கி ஓடினான். உரிய நிறுத்தத்தில் அவள் நின்றிருந்தாள்.

'புஸ், புஸ்' என்ற பெருமூச்சுக்களுக்கிடையே, "சாரி, யோசனையில் இருந்துட்டேன்" என்றான் மன்னிப்புக் கேட்கும் தொனியில்:

கைக்குட்டையால் முகத்தைத் துடைத்தபடி அவளோடு சேர்ந்து நடந்தான். வியர்வையால் ஊறிய பனியனைத்துளைத்துக்கொண்டு, ஜில்லென்று உடலைத் தழுவியது காற்று.

வீட்டு வாயிலில் தயங்கி நின்றான்.

"உள்ளே வாங்க."

சோபாவில் அமர்ந்தான்.

தன்னால் ஆனது இவ்வளவுதான் என்பது போல் நலம் விசாரித்துவிட்டு உள்ளே சென்றுவிட்டார் நளினியின் அப்பா.

காப்பி கொண்டு வந்து டேபிள் மேல் வைத்தாள். ஸ்வீட் பாக்கெட்டை அவளிடம் நீட்டினான். வாங்கிக் கொண்டாள்.

காப்பியை ஆற்றி அண்ணாந்து குடித்தான். "புறப்படறேன்" என்றான்.

வாயில்வரை வந்தாள். "ப்ளீஸ், இனிமேல் வராதீங்க."

அவசரமாய்ப் படி இறங்கி வேகமாய் நடந்தான்.

மிக அருகில் நின்றிருந்த அப்பா, "என்னம்மா இது போலி நாடகம்?" என்று கனிவாகக் கேட்க, "நோ! என்னை ஒன்றும் கேட்காதீர்கள்" என்றவள் சட்டென அவர்மேல் சரிந்து தேம்பித் தேம்பி அழுதாள்.

சிறிது தூரம்தான் சென்றிருப்பான். இவளை என்றென்றும் பிரிந்து விடுவோமோ என்ற எண்ணம் மேலிட, அதன் பிரதிபலிப்பாய்க் கண்கள் கலங்கின.

சட்டெனச் சட்டையின் வலது கைப்பகுதியை உயர்த்தி முழங்கையைப் பார்த்தான். முட்டியில் முகாமிட்டிருந்த வெள்ளைத் தழும்பு மெர்க்குரி விளக்கின் ஒளியில் பளிச்செனப் பிரகாசித்தது.

இது வெண்குஷ்டமா?

டாக்டர் அப்படிச் சொல்லவில்லை. 'ஆயில் அலர்ஜியால்கூட இப்படி நேரலாம். ரிஃபைண்ட் ஆயில் யூஸ் பண்ணிப் பாருங்க, பலன் கிடைக்கலாம்' என்றார். முதலிரவு அறையில் குற்றவாளியாய் நின்று இதைத்தான் சொன்னான்.

நளினியோ நம்பவில்லை!

"என்னை ஏமாற்றித் திருமணம் செய்து கொண்டீர்கள்" என்றாள். "நான் ஒரு பெரிய பதவியில் இருப்பவள்; நாலு பார்ட்டியில் கலந்து கொள்ள வேண்டி வரும். இது உடம்பெல்லாம் பரவிடுச்சுன்னா உங்களைக் கூட்டிகிட்டுத் தலைநிமிர்ந்து போக முடியுமா?" என்று கோபமாயும் ஆவேசமாயும் கேட்டாள்.

எதையோ இழந்துவிட்டது போலக் கைகளில் முகம் புதைத்துக் கதறினாள். 'நான் என்ன பாவம் செய்தேனோ' என்று அரற்றினாள்.

அதிர்ந்து போனான் நரேன். ஆறுதல் சொல்ல, அவள் தோள்மீது கைவைத்த போது, "தொடாதீர்கள்!" என்று கர்ஜித்தாள். "ஐ ஹேட் யூ.... யூ சீட்.....!" என்று ஏசித் தலையணையை விட்டெறிந்தாள்.

சொல்லொணா வருத்தமும், பயமும், குழப்பமும் நரேனைச் சிலையாக்கியது.

"ப்ளீஸ் நளினி! நீ நினைப்பதுபோல் எனக்கு எதுவும் ஆகாது. ப்ளீஸ் பிலீவ் மி....." சொல்லி முடித்தபோது கண்கள் ஊற்றாயின.

'என்ன ஒரு கேவலமான நிலை எனக்கு. என்ன இந்த வெள்ளைச் சனியன்? நான் இவளை ஏமாற்றிவிட்டேனா? நோ!

'இது இத்தனை பெரிய பிரச்னையாகும் என்று எனக்குத் தோன்றவில்லையே! ஏன்...? சுயநலமா.....? தாலி கட்டிய பிறகு இவளால் என்ன செய்ய முடியும் என்ற எண்ணமா...? ஆண்பிள்ளைதானே என்ற அலட்சியமா.....? இல்லை, இல்லை! சத்தியமாய் நான் அப்படி நினைக்கவில்லை..... ஆனால், இதை ஒரு குறையாய்க் கருதி உன்னிடம் சொல்லாதது தவறுதான். அதற்காக......!'

கண்களைத் துடைத்துக் கொண்டு உறுதியோடு நிமிர்ந்தான் நளினி. "ஐ'ம் வெரி சாரி! மனம் திறந்து உண்மையைச் சொல்லிடறேன்.... உங்களைப் பார்க்கவே ரொம்ப அருவருப்பா இருக்கு. ப்ளீஸ் பிரிஞ்சுடுவோம்!"

"எண்ணத்தில் இளமை துள்ளும்போது, தோற்றத்திலும் இளமை வேண்டுமென்றே!"

**"நான் வழக்கமாக கோத்ரெஜ் பவுடர் ஹேர்-டை உபயோகிக்கிறேன்"**

—தனுஜா

பிரபல, திரைப்பட மற்றும் டி. வி. நட்சத்திரம் தனூஜா எப்போதும் தன் தோற்றத்தை கவர்ச்சிகரமாக வைத்திருக்கிறார். இவரின் குன்றாத இளமை, இவரை துடிப்புடனும், சுறுசுறுப்புடனும் தோன்றச் செய்கிறது.

"திருமணம் ஆகி இரண்டு பெண்களுக்கு தாயான பின்பும், நான் இளமையுடன் தோன்ற வேண்டும் என விரும்புகிறேன் ஆகையால், கேசத்திற்கு சாயம் பூசுவதை நகச்சாயம் தீட்டிக் கொள்வது போலவே முறை தவறாமல் செய்கிறேன்!"

"நான் கோத்ரெஜ் பவுடர் ஹேர்-டை உபயோகிக்கிறேன்! இது பாதுகாப்பானது; தானே பரவுகிறது; உபயோகிக்க எளிது. கேசத்திற்கு இயற்கை வண்ணமூட்டுகிறது. ஆம் நிச்சயமாக, நான் இளமையுடன் தோன்ற விரும்புகிறேன்! எந்தப் பெண்மணிதான் விரும்ப மாட்டாள்!!"

இப்போது 25% அதிகம் புதிய பேக்கில்







உங்களால் கணிக்கவே முடியாது... அவர் சொல்லும் வரை... இவ்வளவு இயற்கையான தோற்றம்.

Mudra: B: GPH: 2705: TM

பழுக்கக் காய்ச்சிய மெல்லிய ஊசியொன்று பளிச்சென இதயத்தில் பாய்ந்தது போலத் துடிதுடித்துப் போனான் நரேன்.

இனியும் இவளிடம் யாசகம் கேட்பதில் அர்த்தமில்லை என்பதுபோலச் சிலகணங்கள் அவள் வதனத்தைக் கூர்ந்து நோக்கினான்.

அழகிய கருவிழியை, அசைந்தாடும் செவியோரக் கேசங்களை, வழவழப்பான கன்னங்களை, வரைந்த ஓவியம் போன்ற வடிவழகை.... ஓ. இவள் அழகி! ஓர் அழகனே தனக்கு மணவாளனாய் வரவேண்டும் என்றிவள் எண்ணுவதில் தவறில்லை. எனக்கும் முகலட்சணத்தில் எவ்விதக் குறையும் இல்லை! ஏன், நடை, உடை, பாவனையில் கூட குறைச்சல் இல்லை.... ஆனால்.... ஆனால்.... இந்த வெள்ளைச் சனியன்!

மெல்லச் செருமிக் கொண்டான். "பாதிப்பு உனக்குத்தான் அதிகம்னு நான் ஃபீல் பண்றேன்" என்றான் தெளிவாக.

எங்கோ திரும்பிக் கொண்டாள். "எதையும் சந்திக்கத் தயார் என்ற முடிவுக்கு வந்துட்டேன்."

ஓ. அவள் வார்த்தைகள் அத்தனையும் அம்புகள். குறிப்பாக இதயத்தை நோக்கி எறியப்பட்டவை. கமல முகம் கொண்ட இவள் மனம் கல்லோ!

ஆனாலும் சேர்ந்து வாழத் துடிக்கும் எண்ணம் 'அவகாசம் கேள்' என்றது. "நீ ரொம்ப அவசரப்படறேன்னு தோணுது. யோசிக்க மூணு மாசம் டைம் தர்றேன். நிதானமா யோசிச்சு உன் முடிவைச் சொல். இது வாழ்க்கைப் பிரச்னை" நிதானமாயும் தெளிவாயும் சொன்னவன் ஒதுங்கிப் படுத்தான்.

அடுத்த சந்திப்பு இன்றுதான். அதுவும் அம்மா வற்புறுத்தியதால்!

யார் பிரிவையும் பொருட்படுத்தாத நாட்கள் இயல்பாய் நகர்ந்தன. மூன்று மாதங்கள் முடிந்தே போயின.

"ஊழல் பேர்வழிகளின்மேல் நடவடிக்கை எதுவும் எடுக்க வேண்டாம்னு தலைவர் சொல்லிட்டார்!"

"ஏன்?"

"இருக்கிற ஒன்பது பேரும் போய்விட்டால் கட்சியைக் கலைக்க வேண்டியிருக்குமே, என்கிற பயம்தான்!"

— ச. பஞ்சு



அன்று தொலைபேசியில் அழைத்து, "என்ன முடிவு செய்தாய்?" என்று வினவினான் நரேன். வார்த்தைகளில் ஏக்கமும், எதிர்பார்ப்பும், பரபரப்பும் ஒன்றையொன்று மிஞ்சின.

எதிர்முனை சில நொடிகள் மௌனித்தது. பிறகு, "அதே முடிவுதான்!" என்றாள் அழுத்தமாக.

குழந்தைபோல அழுதான் சிலகணம். பாழும் மனம் 'அவள்! அவள்!' என்று அலைவானேன்? முறைத்துப் பார்த்து விலகி ஓடும் அவளிடம் எதைக் கண்டது இந்த மனம்!

ஆனாலும் அவள் முடிவைச் செயலாக்க வேண்டிய நிலை அவனுக்கு.

இரவு மணி எட்டு. நளினியின் வீட்டின் முன் டாக்ஸி ஒன்று வந்து நின்றது.

களையிழந்த முகத்துடன் உள்ளே நுழைந்தான் நரேன்.

வாயிலில் தயங்கி நின்ற வக்கீலையும் அந்தப் பெண்ணையும், "உள்ளே வாங்க!" என்றழைத்தான்.

நளினியும், அப்பாவும் யோசனையோடு பார்த்தனர்.

ஒருமுறை செருமிக் கொண்டு, "மேடம் நளினி!" என்று நரேன் ஆரம்பித்தபோது, இதுவரை விரும்பி எதிர்பார்த்த ஒன்று இதோ நிகழப் போகிறது என்பதை உணர்ந்த நளினிக்கு திடுமெனக் குழப்பம்!

"இவர் லாயர்! அடல்ட்ரி ப்ரூவ் பண்ணினால் விவாகரத்து எளிது என்று அபிப்ராயப்பட்டார். இவள் விலை மாது! இந்தப் பெண்ணுக்கும் எனக்கும் தொடர்பு இருப்பதாயும், அதனால் விவாகரத்து கோருவதாயும் நீங்க கேஸ் ஃபைல் பண்றீங்க. எனக்கும் இவளுக்கும் சம்மன் வரும். நான், நீங்க, இவள் மூவரும் கோர்ட்டில் ஆஜர் ஆவோம். உங்களுக்கும், இந்தப் பெண்ணுக்கும் சட்டத்திற்குப் புறம்பான உறவு உண்டான்னு என்னைக் கேட்பார்கள்...." சற்று நிறுத்தி மெல்லத் திரும்பி சோபாவின் மேல் கையூன்றிச் சுவரைப் பார்த்தவாறு நின்றான்.

அதிக சிரமத்துடன் தன்னைச் சுதாரித்துக் கொண்டான். கண்களே! கண்களே! கலங்காதே என்று மானசீகமாய் மன்றாடினான். பிறகு தழுதழுத்த குரலில் சொன்னான்: "நளினி சொல்வது அத்தனையும் உண்மை. எனக்கும் இந்தப் பெண்ணுக்கும் தொடர்பு உண்டுன்னு நான் சொல்லிடறேன்."

சில கணங்கள் அமைதி நிலவியது.

பிறகு, காகிதங்களின் சலசலப்பு.

கைமாறிய காகிதங்களில் கையொப்பக் குடியேற்றம்.

வக்கீலும், உடன் வந்த பெண்ணும், டாக்ஸியும் சென்றுவிட.... வெளியே நின்று நளினியின் வீட்டை ஏக்கத்தோடு கூர்ந்தான் நரேன்.

பிறகு, மெல்லத் திரும்பி பொசுக்கென அடியெடுத்து வைத்தான்.

நிசப்தமான பாதை. லேசான இருள். தனியாக அவன்!

# இவருடைய புன்னகைக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது



**இந்த ஃப்ளோரைட் பாதுகாப்பினை ஸிபாகா ஃப்ளோரைட் அளித்துள்ளது**




உங்கள் பற்கள்
பல்லாண்டு நீடித்திருக்க,
சொத்தை விழுவதிலிருந்து
அவைகளைப் பாதுகாக்க வேண்டும்.
இதோ ஸிபாகா ஃப்ளோரைட். அவைகளுக்கு
ஃப்ளோரைட் மூலம் இன்றியமையா பாதுகாப்
பளிக்கிறது. ஏனெனில், தீங்கு விளைவிக்கும் அமிலங்
கள் பற்களின் பரப்பைத் தாக்கும்போது, பற்களினால்
கிரகிக்கப்பட்ட ஃப்ளோரைட், பல்லின் எனாமலுக்கு
சொத்தையை எதிர்க்கும் ஆற்றலைக் கொடுக்கிறது. இதன் மூலம்
பற்சிதைவு ஆரம்ப கட்டத்திலேயே தடுத்து நிறுத்தப்படுகிறது.
பற்சிதைவையும் சொத்தையையும் ஸிபாகா
ஃப்ளோரைட் உபயோகித்து தடுத்து நிறுத்துங்கள்.

உங்கள் பற்கள் பல்லாண்டு வாழ

## ஸிபாகா ஃப்ளோரைட்

டூத்பேஸ்ட்

இந்தியாவின் முதன் முதல் சக்தி வாய்ந்த ஃப்ளோரைட் பற்பசை

ULKA-HCG-CF-11-86– TAM

# 3




புவனா வயதுக்கு வந்ததற்கு மாமன் சீராக எடுத்திருந்த அகலக் கரையிட்ட சைனா சில்க் பாவாடையும் நைலக்ஸ் தாவணியும் அணிந்து, சந்திரசேகர் கொண்டு வந்திருந்த மல்லியைப் பந்தாகச் சுருட்டித் தலையில் சூடிக் கொண்டாள்

''ஏய் அசடு, அப்படிப் பூ வச்சுக்கக் கூடாது.'' ஞானம் மகளைச் செல்லமாகக் கடிந்தபடி, பூப்பந்தை வெளியே எடுத்து, மயிர் ஆரம்பத்தில் இரட்டை க்ளிப் குத்தி அரை அடி நீளம் கீழே தொங்கவிட்டாள். ''இப்போ பாரு அம்பிகா மாதிரி இருக்கே'' மகள் முகத்தில் நிறைய ரோஸ் பவுடர் அடித்தாள்.

''அம்மா, தெருக்கூத்துக்கு வேஷம் கட்டிறாப் போல மொகத்துலே பவுடர் பூசறியே?'' புவனா கையை வைத்து முகத்தைத் தடுத்துக் கொண்டாள்.

''கையை எடுடி!'' ஞானம் கோபத்துடன் படாரென அவள் முதுகில் ஓர் அடி போட, புவனா பெரிய குரலெடுத்து அழத் துவங்கினாள். ''சனியன், சுத்த ரெண்டுங்கெட்டானா இருக்கியே. நீ, நாலு பேர் அறியப் பாடிப் புகழ் பெறணும்னு நான் உசிரை விடறேன். நீயானா விவரம் புரியாமல் இப்படிக் கழுத்தறுக்கறியே'' என்று ஞானம் நயமாகச் சொல்லிப் பார்த்தாள்.

''நான் இந்த மேக்—அப்பெல்லாம் போட மாட்டேன். எல்லோரும் சிரிப்பாங்க'' புவனா முரண்டு பிடிக்க ஞானம் அவளைச் சமாதானப்படுத்தி மெல்ல பவுடரைத் தடவினாள். ''என் செல்லக் கண்ணல்ல புவனா, உன்னைக் கூப்பிட வந்த அண்ணங்க என்ன சொல்லிட்டுப் போனாங்க. உன்னை அழகா அலங்காரம் பண்ணி அழைச்சுட்டு வரச் சொன்னாங்க. மந்திரி மாதிரி பெரிய மனுஷங்க வர்ற இடத்திலே நீ அழகா உடுத்திட்டுப் போறதுதான் அவங்களுக்கு மரியாதை.''

''ஊஹூம்.... நான் அலங்காரம் செய்துக்கறது அவங்களுக்கு மரியாதையாம். போம்மா. இந்தக் குருவி வாலு மையி, புருவத்திலே சாயம் எல்லாம் எனக்குப் பிடிக்கலேயில்லையம்மா. கதகளி நடனத்திலே அரிதாரம் பூசி ஆடுவாங்களே அப்படி இருக்கு. அதுவும் ராட்சசி மாதிரி'' சின்னக் கண்ணாடியில் தன் முகத்தைத் தானே பார்த்துக் கொண்டு, கண்களை உருட்டி உதட்டைச் சுழித்தாள் புவனா. அவள் செய்த சேட்டைகளைக் கண்டு ஞானத்துக்கே சிரிப்பு வந்தது.

இன்னும் சின்னக் குழந்தை போல் ஓட்டமும், குதியலும், சேஷ்டையுமாக இருக்கும் இவளுக்குத் தன்னிடம் எவ்வளவு பெரிய கலைப் பொக்கிஷம் உள்ளது என்று புரியாதது அதிசயமில்லை. அவளைப் பொறுத்த வரை யாராவது வெளியே அழைத்துச் சென்றால் நிறைய சந்தோஷம். அதுவும், இதைப் போல அடுத்த ஊர்வரை கார் சவாரி என்றால் சும்மாவா? பள்ளிக்கு விடுப்புச் சொல்லலாம், புதுத் துணி கட்டலாம், எல்லாவற்றுக்கும் மேல் சிலமணி நேரமாவது அவளுக்கு நிறையக் கவனம் கிடைக்கும். கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்பவர்கள், தலைவர், மந்திரிமார்கள் வரும்வரை, ''பாப்பா, உம்பேரு என்ன சொன்னே மறந்து போச்சே....'' என்று கரிசனத்துடன் விசாரிப்பார்கள். ''நான் எம்பேரை சொல்லவேயில்லையே'' என்று இவள் 'கலீர்' எனச் சிரிப்பாள். ''நீங்கதான் எல்லோரும் என்னைப் பாப்பாவாக்கிட்டீங்களே....''

''ஹி.... ஹி.... பாப்பா ரொம்ப வேடிக்கையாப் பேசுது. அதுக்கு நல்லதா ரெண்டு ஸ்வீட்டும் மிக்சரும் வாங்கியா'' என்று ஆணை பறக்க, புவனாவுக்கு வயிறு நிறையத் தின்னக் கிடைக்கும். ஒருமுறை, ''ஐயா, ஐஸ்க்ரீம் வாங்கித் தர்றீங்களா?'' என்று அவள் ஐஸ்க்ரீம் வண்டியைப் பார்த்துக் கேட்டபோது, அமைப்பாளர் திடுக்கிட்டார். ''வாத்யார் ஊட்டம்மா, பாப்பா



கேக்குதேன்னு ஐஸ்க்ரீம் எல்லாம் வாங்கிக் கொடுத்திடாதீங்க. அமைச்சர் வர டயத்திலே,குரல்எழும்பாமபோயிட்டாஎன்னங்க செய்யறது'' என்று பதறினார்.

''சே... சே.... அவ ஏதாவது கேட்பா, நான் அதெல்லாம் குரல் கெடாமப் பார்த்துக்கறேன்'' என்று ஞானம் கூறியதுடன்,குளிர்ப் பதார்த்தங்களைப் புவனா கண்ணில் காண பிப்பதுமில்லை. இந்த ஒரு விஷயம் மட்டும் புவனாவுக்கு மிக்க வருத்தத்தை அளித்தது. மற்றபடி அம்மாவுடன் செல்லும் இந்தப் பிக்னிக் வைபவங்களைப் பற்றிப் பள்ளியில் சக மாணவிகளுடன் பகிர்ந்து கொள்ள நிறைய விஷயம் இருந்தது. அவர்கள் வாய் திறந்தபடி இவள் பேசுவதைக் கேட்கும் போது பெருமையாகவும் இருந்தது.

புவனாவின் திறமை வெளி வந்ததே அவள் அதிர்ஷ்டம்தான் என்று ஞானம் நினைத்தாள். அவளும் ஓதுவார் குடும்பத்தில் பிறந்தவள்தானே. அதனால் பாட்டு என்பது பெரிய விஷயமாகத் தோன்றியதில்லை. அவள் குடும்பத்தினர் யாரும் பாட்டுப் பாடி அரண்மனை கட்டவோ, புகழ் பெறவோ இல்லை. எனவே பாட்டு என்றால் ஓரளவு வெறுப்பு கூட இருந்தது. மாமன் சுந்தரம் இந்தப் பரம்பரைத் தொழில் வேண்டாம் என்று கல்லூரிப் படிப்பு படிக்கத் துவங்கியபோது, அவரை மணக்கக் காத்திருந்த ஞானம் நிறையக் கனவு கண்டாள். பள்ளியிறுதிவரை படித்திருந்த அவளுக்குப் பட்டண வாழ்வு பற்றிக் கற்பனை வளர்ந்து, படர்ந்திருந்தது. நாகரிகமாக வாழ வேண்டும் என்று அதீத ஆசையிருந்தது. இந்த அலுக்க வைக்கும் கட்டுப்பெட்டித்தனத்திலிருந்து விடுபட்டுச் சுதந்திரமாக வாழ வேண்டும், உடுக்க வேண்டும், கடை, கண்ணிக்குப் போக வேண்டும், சினிமா பார்க்க வேண்டும் எனத் திட்டமிட்டாள். கோவில் குருக்கள் குடும்பத்திற்கு அடுத்தபடியாக ஓதுவார் குடும்பங்கள் பழைமையான, வாழ்க்கை முறையைக் கட்டிக் காத்தது அவளுக்கு அடியோடு வெறுப்பூட்டியிருந்தது.

ஆனால் சுந்தரம் படித்து முடித்து டீச்சர் ட்ரெயினிங் எடுத்து, அவளைத் திருமணமும் செய்து கொண்டவுடன், ''நான் பட்டணத்திலே போய் வாழப் போறதா யார் ஞானம் உனக்குச் சொன்னா? நம்ம ஊர்ப் பள்ளிக்கூடத்திலில்ல நான் வேலைக்கு ஏற்பாடு செய்திருக்கிறேன்?'' என்றவுடன் அவள் அதிர்ந்து விட்டாள். கண்ணீர் கரகரவென வழிந்தது.

சுந்தரம் மிகவும் அழகான தோற்றமுடையவர். அவர் கையும், காலும் உடற்பயிற்சியின்றியே உருண்டு திரண்டிருக்கும். அவர் பார்வையிலேயே ஒரு வசீகரமிருக்கும். அவர் பேச்சில் நிதானமும், அறிவும் இருக்கும். திருமணமாகிச் சில ஆண்டுகள் அவர் ஆண்மை, அறிவு இரண்டிலும் கட்டுண்டு தன் தாரத்துக் கனவுகளை அவள் விலக்கியே வைத்திருந்தாள். ஆனால் ஞானசுந்தரியின் நெஞ்சில் ஏமாற்றம் அக்கினிக் குஞ்சாகக் கனன்று கொண்டே இருந்தது. அவள் எதிர் பார்த்த வாழ்க்கையென்ன, அவள் பெற்றுள்ளதென்ன?

ஓரளவு படித்திருந்த ஞானம், அறிவைப் பெருக்கிக் கொள்ளக்கூட இந்த ஊரில் வழியில்லை. எல்லாப் பெண்களையும் போல் வீட்டு வேலை, சமையல், குழந்தை வளர்ப்பு, ஊர் வம்பு என்ற வட்டத்திற்குள் அடங்கிப் போனாள். வாரம் ஒருமுறை டெண்ட் கொட்டகையில் மாறும் சினிமா மட்டுமே பொழுது போக்காயிற்று. சினிமா காட்டிய ஒரு பொய்யான உலகம் பற்றிப் பேசி, அந்த உலகத்து மனிதர்களாகத் தங்களை நினைத்துக் கொண்டு அந்தப் பேதமை எண்ணத்திற்குப் பலியாகும் லட்சக்கணக்கான தமிழகப் பெண்களில் ஞானமும் ஒருத்தியானாள்.

# இல்லாதென்ன?

## அருள்வாக்கு



நல்ல ஸத் விஷயங்களில் பிடிமானம், படிப்பு, பயிற்சி, பக்தி, பூஜை, த்யானம் உள்ளவர்களைத் தவிர மற்ற பெரும்பாலாரின் மனஸை கெட்டதுகளில் போகாமல் தடுப்பதற்குச் சரீர உழைப்புதான் ஸாதனமாகிறது. நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஏதோ எழுதுகிறோம், யோசனை பண்ணுகிறோமென்றால் அப்போதும் மனஸ் அதுபாட்டுக்கு அவ்வப்போது இதை விட்டுவிட்டு ஓடிக் கொண்டுதானிருக்கும். அதுவே சரீரத்தால் கார்யம் செய்கிறோமென்றால் அப்போது அப்படிப்பட்ட கார்யத்திலேயே மனஸ் அதிகம் ஈடுபட்டு விடுகிறது. அதனால் கண்ட கண்ட நினைப்புக்களுக்கு ஓடாமலிருக்கிறது. இது 'நெகடிவ்'தான் என்று ஒப்புக் கொள்கிறேன். அதாவது சரீர உழைப்பால் சித்தம் கெட்டதில் போகவில்லையே தவிர, நல்லதில் ஈடுபட்டு உத்தம அநுபவங்களைப் 'பாஸிடிவ்' ஆகப் பெறவில்லைதான். ஆனால் முதலில் இந்த நெகடிவ் ஸ்டெப்பில் அடி வைத்துத்தான் பாஸிடிவுக்குப் போயாக வேண்டியிருக்கிறது. ஆசார்யாள் அதனால்தான் முதலில் கர்மாநுஷ்டானம் அப்புறம் இதனால் ஏற்படும் சித்த சுத்தியினால் மனஸ் உத்தமமாகவே போகிற பக்தி, அதற்கப்புறம் மனஸே போய்விடுகிற ஞானம் என்று படி வரிசை போட்டுக் கொடுத்தார்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

தான் பெற்றது இரண்டும் பெண்ணனதே அவனுக்கு மிகவும் ஏமாற்றமாக இருந்தது. அவர்கள் இரண்டு பேரும் ஞானத்தைப் போலவே மிக அழகாக இருந்தும், 'ஆமா ஆத்தாளைக் கொண்டு அதிர்ஷ்டக்கட்டையாக இருக்காதீங்க' என்று தன் தாபத்தையெல்லாம் மிரட்டலாகக் காண்பிப்பாள்.

''உனக்கென்ன குறை ஞானம்?'' என்று சுந்தரம் மனைவியைச் சீண்டுவார். ''உம் மேலே உசிரா இருக்கேன் நான். சமத்தா ரெண்டு பசங்க. இந்த வயசிலும் நீ அழகா அம்பாள் மாதிரி இருக்கே.... ம்.... சொல்லு... உன் அதிர்ஷ்டத்துக்கு என்ன குறை'' என்று கேட்பார்.

''ஊம்.... இந்த ஓட்டு வீடு, ஒரே மாதிரி வாழ்க்கை எல்லாம் எனக்கு அலுத்துப் போச்சுங்க. ஊருக்குள்ள உறவுக்காரங்க வீடு, அவங்க சண்டை, சச்சரவு, நல்லது, கெட்டது இதுதானே இருக்கு'' என்று அலுத்துக் கொள்வாள்.

இரண்டு வருடங்கள்முன் சுந்தரம் மனைவியையும், பெண்களையும் கோடை விடுமுறையின்போது சென்னைக்கு நான்கு நாட்கள் அழைத்துச் சென்றார். பீச், ஜூ, ம்யூசியம், பெரிய பெரிய கடைத் தெருக்கள், தியேட்டர்கள் இவற்றைப் பார்த்து ஞானம் மலைத்தே நின்றுவிட்டாள். அழகே இல்லாத பெண்கள் கூட விதவிதமாக உடுத்திக் கொண்டு தனியே வெளியே செல்வது அவளுக்கு வியப்பளித்தது.

அவர்கள் தங்கியிருந்த தூரத்து உறவினர் வீட்டில் இரண்டே அறையில் ஆறு பேர் வசித்ததோ, குடும்பத் தலைவி தினமும் குடி தண்ணீருக்காக அலைந்ததோ, விடுமுறை நாட்கள் ரேஷன் க்யூவில் கழிந்ததோ, ஞான சுந்தரியின் பார்வையில் ஏனோ படவில்லை. மாருக காஸ் அடுப்பும், தெருக் கடைசியிலிருந்த மாவு மெஷினும், குடும்பத் தலைவியின் நைலக்ஸ் புடைவையும், அவர்கள் பார்த்த சினிமாக்களும்தான் நினைவில் நின்றன. ஊருக்குத் திரும்பியதிலிருந்து அவள் இதே ஏக்கத்தில் கழித்தாள்.

அம்மாவின் இந்தக் குறைகளையும் ஏக்கங்களையும் கேட்டு லோகேஸ்வரியும் அதே பாணியில் கற்பனைகளை வளர்த்திருந்தாள். லோகசுந்தரி நல்ல உயரம். மொழுமொழு வென்ற உடல்வாகு. அப்பாவைப் போன்ற பெரிய கண்கள். பள்ளியிறுதிவரை படித்துவிட்டு வீட்டோடு உட்கார்ந்திருந்தவள் மனத்தில் அப்பா தங்கள் சுக வாழ்க்கையைக் கெடுக்க வந்தவராகத் தோன்றியதில் வியப்பில்லை.

அவர்கள் குடும்ப வழக்கப்படி, லோகுவிற்குப் பரிசம் போட அத்தை வந்தாள். அத்தை பிள்ளையாவது தன் அப்பாவைப் போல ஊருடன் தங்கிவிடாமல், பட்டணம் சென்று வாழ வேண்டும் என அவள் விரும்பினாள். அவளால் பேச முடியாததையெல்லாம் அம்மாவைவிட்டு, அத்தை மனத்தில் உரு ஏற்றச் சொன்னாள்.

இப்போது சில நாட்களாகப் புவனாவுக்கு

அடித்து வரும் யோகம் அவளிடம் நிறையக் காழ்ப்புணர்ச்சியைத் தோற்றுவித்திருந்தது. அவளைத் தனியே வெளியே செல்லவிடாத அம்மா, புவனாவை மட்டும் அழைத்துக் கொண்டு வெளியே செல்கிறாள். இதுபற்றித் தாய்க்கும் மகளுக்கும் சண்டைகூட வந்தது. ''ஏம்மா, புவனாவைப் பாட அழைச்சுட்டுப் போறப்ப நானும்கூட வந்தா என்னவாம்? ஒருநாள் அப்பா கையிலே சோறு கட்டி எடுத்திட்டுப் போகக் கூடாதா? நான் அவருக்குச் சோறு போடன்னு வீட்டிலே இருக்கணுமாக்கும்?'' என்று சண்டையிட்டாள்.

''உங்கப்பா என்னிக்குச் சோத்தைப் பத்திக் கவலைப்பட்டார். உன்னை வெளியூருக்கெல்லாம் உங்க அத்தை பர்மிஷன் இல்லாம நான் கூட்டிட்டுப் போகமாட்டேன். அப்புறம் ஆயிரம் பொல்லாப்புப் பேசுவாங்க....'' என்று ஞானம் மகளை அடக்கிவிட்டாள்.

''உனக்கு எப்பவுமே ஒரு கண் வெண்ணெய், நான்தான் சுண்ணாம்பு'' என்று லோகு அழுது பார்த்தாள். அப்படியும் ஞானசுந்தரி மசியவில்லை.

ஆனால், புவனா எங்கு வெளியே சென்றாலும், தனக்குக் கிடைக்கும் இனிப்பிலோ, பரிசிலோ பாதியாவது எடுத்து வந்து லோகுவிடம் தராமல் இருக்கமாட்டாள். தான் விழாவில் பாடிய பாட்டை அக்காளிடம் பாடிக் காட்டுவாள். அங்கே நடந்த நிகழ்ச்சிகளை நாடகமாக நடித்துக் காண்பிப்பாள். அக்காவிடம் குறும்பு செய்து அவளைச் சிரிக்க வைப்பாள்.

இன்றும் அப்படித்தான். தழையத் தழையக் கட்டியிருந்த சைனா சில்க் பாவாடையை மேலே தூக்கிச் சொருகிக் கொண்டு, அப்பாவின் துண்டைத் தோளில் தரையைத் தொடும் அளவில் மாட்டிக் கொண்டு காலை அகட்டி, அகட்டி வைத்து நடந்தவாறே ''டேய் சோமாரி, மைக்கை சரியாய்ப் போடுடா..'' ''அந்த நாற்காலியை நவுர்த்துடா....'' என்றெல்லாம் கட்டளையிட்டாள்.

திடீரெனக் குழைவுடன், ''என்ன வாத்தியார் ஊட்டம்மா, வந்துட்டீங்களா... என்ன சாப்படறீங்க. பாப்பா வளர்ந்திடுச்சே.... அப்படியே உங்க மாதிரி லட்சணம்....'' என்று நெளிந்தாள்.

ஞானசுந்தரி திடுக்கிட்டுக் கணவனைப் பார்த்தாள். நல்லவேளை அவர் கவனிக்கவில்லை போலிருக்கிறது. முகத்தில் சலனமில்லை. இந்தப் பெண் தன்னைச் சுற்றி நடப்பவற்றை மிகவும் கூர்மையாகக் கவனிக்கிறாள். இப்போதெல்லாம் அவள் வெளியே செல்லும்போது குறிப்பாக இத்தகைய விழாக்களில் பலர் அவள் அழகைப் பற்றிக் குறிப்பிடுகிறார்கள். அவளுக்கு அது மிகவும் பெருமையாகக்கூட இருக்கிறது. ஆனால் இந்த அசட்டுப் பெண் இப்படிச் சமயம் தெரியாமல் போட்டு உடைக்குமோ?

புவனா தொடர்ந்து நடித்துக் கொண்டிருந்தாள். ''மந்திரி மாலையைக் கையிலெடுத்தாரா.... அம்மாகிட்டே திரும்பி, 'தாய்க்குலம் நீங்களே மவளுக்கு மாலை போடுங்க' என்று கொடுத்தார். அவர் சாப்பிட்டது போக மிச்சமிருந்த ரோசாப்பூவை அம்மா என் கழுத்துல போட்டாங்க.

அனைவரும் சேர்ந்து சிரிக்க, புவனா, பாரதியார் திருகத்தினை அழிக்க முன்வந்ததுபோலத் தங்கள் தலைவர் எப்படி வறட்சியை அழிக்கப் போகிறார் என்று தலைவர் பேசியதை விவரித்துக் கொண்டிருந்தாள்.

''தலைவர் வறட்சியை அழிக்கப் போறாராமா, இல்லே வறட்சியிலே சிக்கியவங்களை ஒரேயடியாய் ஒழிச்சுடப் போறாராமா?'' சுந்தரம் குறுக்கிட்டார்.

''அப்புறம் அப்பா, இந்தப் புத்தகத்திலே இருக்கிற எல்லாப் பாட்டையும் நீங்க கத்துக் கொடுத்துடுங்க. இனிமே மீட்டிங்கிலே எல்லாம் ஆரம்பத்துல நாலஞ்சு பாட்டு, முடிவுலே நாலஞ்சு பாட்டு இதிலேயிருந்து பாடணுமாம்....''

''நல்லாப் பாடினா, காஸட் போடுவாங்களாம்'' ஞானம் ஆவலுடன் சொன்னாள்.

புவனா தந்த பாட்டுப் புத்தகத்தை மெல்லப் புரட்டினார் சுந்தரம்.... நூற்றி இரண்டு பக்கங்கள் துதிமாலைகள். தலைவனை அத்தனை கடவுளர்களாகவும், உலகத் தலைவர்களாகவும் புராண புருஷர்களாகவும் உருவகப்படுத்தி எழுதிய பாட்டுக்கள்....

''புவனா, பொம்பளைங்க, ஏன் ஓதுவாரா வரக்கூடாதுன்னு கேட்டாயில்லையா, உன்னை அதே தொழிலுக்குத்தான் தயார் பண்ணப் போறாங்க. அது ஈஸ்வர ஸ்துதி இது நரஸ்துதி. அவ்வளவுதான் வித்தியாசம். ஞானம், நீ படிச்சவ, உனக்குக் கூடவா இந்த வித்தியாசம்புரியலே?'' பொங்கிய கண்ணீரை மனைவி, குழந்தைகள் எதிரில் காண்பிக்கக் கூடாது என எழுந்து வெளியே சென்றார்.

(தொடரும்)



டாக்டர்: உங்க ஹார்ட் ரொம்ப 'வீக்'காக இருக்கு! சின்ன அதிர்ச்சியைக் கூட தாங்கிக்க முடியாது. கவனமா இருங்க!

நோயாளி: பில் போடும்போது இதை நீங்களும் கவனமா ஞாபகத்துல வச்சுக்குங்க டாக்டர்!

— கிரிஜா மணாளன்



## பாட்டி சொல்லும் படக்கதைகள்

“பாட்டி, பாட்டி, இந்த வாரமாவது நல்ல கதை சொல்லு பாட்டி.”

“பேரப் பிள்ளைங்களா, இந்தப் பாட்டி கையில என்ன இருக்கு? தீபாவளிக்கு வர்ற படங்களைத்தானே சொல்ல முடியும்? நல்லது எது கெட்டது எதுன்னு நீங்கதான் முடிவு பண்ணணும். சொல்லட்டுமா..... மொதல்ல....





மேலுக்கு இரைந்து பேசினாலும், அடி மனத்தில் ஒவ்வொருத்தருக்கும் எத்தனை பாசம்! ஆனால் அத்தனை காரெக்டர்களும் வித்தியாசமாய் இருக்க வேண்டும் என்று முனைந்ததில், நிறைய repetitions, தவிர்த்திருக்கலாம்.

# கண்ணுக்கு மை எழுது

“ஒரே ஒரு ஊரிலே ஒரே ஒரு குடும்பம். அப்பா, அம்மா, வயசுக்கு வந்த சின்னப் பொண்ணு. அம்மாவுக்கும் அப்பாவுக்கும் தினம் சண்டை நடக்கும். சண்டைன்னு பெரிய்ய சண்டையில்லே. ஒண்ணும் இல்லாத விஷயத்துக்கெல்லாம் சும்மாவாச்சும் கத்திப் பேசுவாங்க. சரத்பாபுவும், சுஜாதாவும் ரொம்பப் பிரமாதமா நடிக்கறாங்க.

அதே ஊரிலே ஒரு பெரிய பொம்பிளை டாக்டர். அவங்களுக்கு ரொம்ப நல்ல மனசு. பானுமதியம்மா இல்லே, அவங்கதான் டாக்டர். தான் ஆசையா வளர்த்த சுஜாதாவுக்குச் சாவு நெருங்கிடுச்சுன்னு தெரிஞ்சவுடனே, மனசுக்குள்ள அந்தப் போராட்டத்திலே எப்படி அட்டகாசமா நடிக்கறாங்க தெரியுமா? வேலைக்காரி கிட்ட கத்தறதும், பிரஷர் தாங்காம சிரிக்கறதும், அழுவறதும்... அடடா.... அந்தக் காலத்து ஆளுங்களே தனிதான்!”

“உன் காலத்து ஆளுங்களை விட்டுக் கொடுக்க மாட்டியே, பாட்டி. எங்க காலத்து ஆளுங்களுக்கு என்ன கொறைச்சல்?”

“என்ன கொறைச்சல்.... டிஸ்கோ சாந்தின்னு ஒரு பொண்ணைக் காட்டறாங்களே, கண்றாவி... எப்படில்லாம் ஆடுது அது? சாவு பத்தின படம்; ஒவ்வொரு ஆக்டரும் நல்லா பண்றாங்க. அப்பால எதுக்கு அந்த டான்ஸ்? போவுது போ. கதையை எங்கே விட்டேன்.... ஆங்.... அந்தப் பொண்ணு கான்ஸர்ல சாவப் போவுது. புகுந்த வீட்ல, புருஷன் பைத்தியமோன்னு சந்தேகப்படறான். பொறந்த வீட்லே அது புருஷனோட சேர்ந்து வாழணும்னு துரத்தி விடறதிலேயே குறியா இருக்காங்க. அப்புறம் அது, தான் சாகறதுக்குள்ள மகளைக் கல்யாண கோலத்தில பாக்கணும்னு ஆசைப் படுது. அதுக்காக எதிர் வீட்ல.....”

“முடிவு என்ன பாட்டி, அந்தம்மா செத்

தாங்களா இல்லையா?''

''பார்த்தியா, படத்தோட முடிவு தெரிஞ்சப்புறம் என்ன இன்ட்ரஸ்ட் இருக்கும் கதையில? பரிசு வாங்கற படம் போல ரொம்ப மெதுவாப் போவுது. எல்லாருமே 'நீ திருந்தவே மாட்டியா?'ன்னு அடுத்த ஆளைப் பார்த்து ஒரே மாதிரி டயலாக் பேசறாங்களா, செட்டுக்கு வந்து வசனம் எழுதின மாதிரி தோணுது.... காமிராவும், பாட்டும் மோசமில்ல.... ஆனா விஷயத்தை விட்டுட்டு மகேந்திரன் சுத்திச் சுத்தி வராரு. பொறுமையே போயிடுது....''

''வேறே கதையாச்சும் சொல்லேன் பாட்டி.''

# அறுவடை நாள்

''ஒரே ஒரு ஊரிலே ஒரே ஒரு கிராமம். முரட்டுப் பண்ணையாரு. அவரைச் சுத்தி எப்பவுமே அடியாளுங்க. அந்தப் பண்ணையாருக்கு ஒரு சாதுவான பிள்ளை. குனிஞ்ச தலையோட ஒரு பொண்டாட்டி. அப்புறம் என்ன? தாட்பூட் தர்பார்தான்! கிராமமே அவருக்கு நடுங்குது. ஊருக்குப் புதுசா ஒரு கிறிஸ்துவ டாக்டரம்மா வராங்க....''

''அவருக்கும் பண்ணையார் மவனுக்கும் லவ்வா பாட்டி?''

''இந்தக் காலத்துப் பசங்களே ரொம்ப மோசம். உடனே லவ்வுன்னு கண்டுபிடிச்சிடுவீங்களே.... 'அந்தக் காதலுக்கு பண்ணையாரு தடை சொல்றாரு. ஒரு தந்திரம் செஞ்சு, தங்கச்சி மவளை கட்டி வச்சிடறாரு. ஆனா அந்தப் பொண்ணு நல்ல பொண்ணு. காதலிச்சவங்களை மறுபடியும் சேர்த்து வைக்க நினைக்குது. பண்ணையாருக்கு எதிரா பஞ்சாயத்திலே தீர்ப்பாயிடுது. விடுவாரா ரோஷக்காரப் பண்ணையாரு? நெருப்பு வச்சு....

''வேணாம் பாட்டி, மேலே சொல்லாதே. நாங்களே பார்த்துக்கறோம்.''

கன்யா ஸ்திரீ (Nun) ஆக விரும்பும் கதாநாயகி பாதி நேரம் கவர்ச்சிகரமான டிரெஸ்களில்! மற்றபடி ஒரு கிராமியச் சூழ்நிலையை வெகு அமர்க்களமாகக் கண்ணுக்கு முன்னே கொண்டு வந்திருக்கும் டைரக்டர் குமார், வசனகர்த்தா ஆர்.பி. விஸ்வம், காமிரா விஜயலட்சுமி மூன்று பேருக்கும் தனித் தனியே கைகொடுக்க வேண்டும். இளையராஜாவோடு நகைச்சுவை, பிரபுவை பிரகாச



மாக்கியிருக்கிறது. ஏமாற்றப்பட்டுத் தாலி கட்டிய காட்சியில் அவருக்கு ஏற்படும் அதிர்ச்சி, அதன் பின்விளைவுகள் எல்லாமே கச்சிதம். வடிவுக்கரசிக்கு எட்டுப் பொருத்தம் அந்தப் பண்ணையார் மனைவி பாத்திரம். ஆனால் அத்தனை பேரையும் தூக்கிச் சாப்பிட்டு 'ஏவ்' என்று ஏப்பம் விடுகிறார், பண்ணையாராக வரும் விஸ்வம்! வேட்டி, கதர் பனியன், வாயில் வெற்றிலை, எகத்தாளமான மிடுக்கு, தந்திரம், கோபம், ரோஷம், ஸிம்ப்ளி கிரேட்!

பட்டை தீட்டப்படாத ஓரங்கள் கையைக் கிழிக்கக் கூடிய ஆனால் வித்தியாச ஜொலிப்போடு ஒரு படம் அறுவடை நாள்.

— ஜெயமன்மதன்

# மக்க…
# உ…
# வண்டா…



தண்ணீர் வேட்டைக்குச் செல்லும் மாட்டு வண்டி.



உலக மகா அதிசயமாக கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற வேண்டிய ஊர் பொன்னுண்டாம் பாளையம்!

— எந்த ஊருக்கும் இல்லாத பல தனிச் சிறப்புக்கள் இந்த ஊருக்கு உண்டு!

சுமார் அறுபதே வீடுகளைக் கொண்ட இந்தக் கிராமத்திற்கு இரண்டு எம். பிக்கள்; இரண்டு எம். எல். ஏக்கள்; இரண்டு பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள்; மூன்று பஞ்சாயத்துத் தலைவர்கள்!

இது எப்படிச் சாத்தியம் என்கிறீர்களா? கதையைக் கேளுங்கள்!

அறுபது வீடுகளில் முப்பத்தைந்து வீடுகள் கணியூர் பஞ்சாயத்திலும், இருபது வீடுகள் மோப்பிரிபாளையம் பஞ்சாயத்திலும், ஐந்து வீடுகள் வடுகபாளையம் பஞ்சாயத்திலும் உள்ளன. கணியூர், மோப்பிரிபாளையம் பஞ்சாயத்துக்கள் சூலூர் ஒன்றியத்தைச் சார்ந்தவை. பல்லடம் சட்டமன்றத் தொகுதியிலும் கோயமுத்தூர் பாராளுமன்றத் தொகுதியிலும் இருப்பவை. ஐந்து வீடுகளைக் கொண்ட வடுகபாளையம் பஞ்சாயத்து, அன்னூர் ஒன்றியத்தைச் சேர்ந்தது; அவினாசி சட்டமன்றத் தொகுதி; நீலகிரி பாராளுமன்றத் தொகுதி!

இந்தக் குழப்பத்தினாலேயே இந்தக் கிராமத்தில் கடந்த சில வருடங்களாகப் பயங்கரமான தண்ணீர்ப் பிரச்னை. அதாவது அந்தப் பஞ்சாயத்து பார்த்துக்கும் என்று இன்னொரு பஞ்சாயத்தும், சரி, அவன் பார்த்துக்குவான் என்று மற்றொரு பஞ்சாயத்துமாக அனைவரும் கைகழுவி விடவே, தண்ணீர்ப் பிரச்னையைத் தீர்க்க ஆளில்லை. இந்த அழகில் தண்ணீர் டாங்க் கணியூர் பஞ்சாயத்திலும், மோட்டார் மோப்பிரிபாளையம் பஞ்சாயத்திலும் இருப்பதால் அப்படியே மழை பெய்து ஏராளமாகத் தண்ணீர் கிடைத்தாலும் திடீரென்று மோட்டார் ரிப்பேராகி விட்டால் யார் சரி செய்வது......? கேள்வி பந்தாடுகிறது: மக்கள் திண்டாடுகிறார்கள்.

முந்நூறு பேர் கொண்ட இந்தக் கிராமத்துப் பெண்களின் முழுநேர வேலையே பல மைல்கள் நடந்து சென்றாவது தண்ணீர் கொண்டு வருவதுதான்! பள்ளிச் சிறுவர், சிறுமியர் பள்ளி முடிந்தவுடன் சைக்கிளில் குடங்களைக் கட்டிக் கொண்டு கிளம்பி விடுகிறார்கள். ஐந்தாவது படிக்கும் மகேஸ்வரி, தினமும் இரட்டைக் குடங்கள் மாட்டிய சைக்கிளை எடுத்துக் கொண்டு ஐந்து நடையாவது தண்ணீர் கொண்டு வருகிறாள்.

பால் வியாபாரம் செய்யும் பொன்னம்மா தினமும் சுமார் ஒரு கி. மீ. தூரத்திற்கு மேல் நடந்து சென்று தலையில் ஒன்று, இடுப்பில்

• நாராயண…

• கப்பையன…

• முத்துசாமி…

# திண்டாட
# றைத்
# ம் அரசு!

ஒன்று என்று குடங்களைத் தூக்கிக் கொண்டு சுமார் முப்பது நடையாவது தண்ணீர் எடுத்து வருகிறார்.

இன்னொரு பெண்ணான தனமணி, "தனியார் கிணத்துக்குத்தானுங்க போறேன்; மனசு இருந்தாத்தானுங்க விடுவாங்க!" என்று தண்ணீர் இறைப்பதற்காகப் படுநீள

சைக்கிளில் தண்ணீர் கொண்டு வரும் மகேஸ்வரி



மான கயிற்றுச் சுருள் ஒன்றைத் தோளில் மாட்டியபடி விரைகிறார்.

நீலகிரி பாராளுமன்ற உறுப்பினர் பிரபு (தற்போது மந்திரி)வும் அவிநாசி சட்டமன்ற உறுப்பினரும், இந்தக் கிராமத்தைத் தெரிந்து வைத்திருப்பார்களா என்பதுகூடச் சந்தேகமே. "நாங்க ஐந்துவீட்டுக்காரங்கதானுங்க இந்தத் தொகுதிக்கு வோட்டுப் போடணும். அதனாலே யாரும் கண்டுக்கறதில்லே. அவுங்க பிரசாரத்துக்கே இங்க வர்றதில்லேன்னாப் பார்த்துக்கங்களேன்!" என்றார் வடுகபாளையம் பஞ்சாயத்தைச் சேர்ந்த முத்துசாமி.

மோப்பிரிபாளையம், பஞ்சாயத்தைச் சேர்ந்த நாராய்ணசாமியும், கணியூர் பஞ்சாயத்தைச் சேர்ந்த சுப்பையனும் பல முறை பல்லடம் தொகுதிச் சட்டமன்ற உறுப்பினரிடம் முறையிட்டு விட்டார்கள். ஆளுங்கட்சி உறுப்பினராயிற்றே. அவ்வளவு சீக்கிரம் அசைந்து கொடுப்பாரா? கணியூர் பஞ்சாயத்துத் தலைவர் தமது ஊரில் மட்டும் மூன்று ஆழ் குழாய்களைப் போட்டு விட்டார். பொன்னுண்டாம்பாளையத்தைக் கண்டு கொள்ளவேயில்லை. போனால் போகிறதென்று ஒரு வருடத்திற்கு முன்பு போடப்பட்டிருந்த ஆழ் குழாய் ஒன்றும் இடையென்று ரிப்பேராகிவிட, மறுபடியும், 'உனக்கென்ன — எனக்கென்ன' கேஸாக எல்லாப் பஞ்சாயத்துத் தலைவர்களும் கையை விரித்துவிட பம்பு அப்படியே கிடக்கிறது.

ஊரில் உள்ள புராதனமான சென்னியாண்டவர் கோயிலில் ஒரு கிணறு இருக்கிறது. சுமார் இருநூறு அடி ஆழத்தில் கொஞ்சம் தண்ணீர் ஊறுகிறது. அதிலிருந்து மோட்டார் போட்டுத் தண்ணீர் எடுக்கலாம் என்றால் அந்தத் தண்ணீரோடு புழு, பூச்சிகளும் சேர்ந்தே வருகின்றனவாம்! (இந்தக் கோயிலிலிருந்து இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு இரண்டு பஞ்ச லோகச் சிலைகள் திருட்டுப் போனதாம். போலீஸ் நாய் எல்லாம் வந்து பார்த்தும் இன்னும் அது கண்டுபிடிக்கப்படவில்லை என்பது தனி விஷயம்!)

பொன்னுண்டாம்பாளையத்தில் பிள்ளையார் கோயிலையும் இந்தத் தொகுதிப் பிரிவு பாதித்திருக்கிறது. சன்னதி அவிநாசி தொகுதியிலும், துவஜஸ்தம்பம் பல்லடம் தொகுதியிலுமாக இருக்கிறது.

கடைசியில், 'மனுக்கள், மனுக்களாக எழுதி எழுதி என்ன பிரயோஜனம்?' என்று சலித்துப் போயிருந்த வேளையில் கோவை மாவட்டக் கலெக்டர் அபுல் ஹசன் பொன்னுண்டாம்பாளையத்துக்கு வந்தாராம். '1947 க்கு அப்புறமே இந்தக் கலெக்டர்தாங்க எங்க ஊருக்கு வந்தார்' என்று அந்த மக்கள் சொல்லிக் கொள்ளும் அளவுக்கு மட்டுமே மகிழ்ச்சியளித்திருக்கிறார் கலெக்டர். மற்றபடி அவர் விஜயமும் குடிநீர்ப் பிரச்னையைத் தீர்த்து வைத்துவிடவில்லை.

இந்த மக்களின் கோரிக்கையெல்லாம் 'எங்கள் கிராமத்தை ஒரே பஞ்சாயத்து யூனியனிலும், ஒரே சட்டமன்ற, பாராளுமன்றத் தொகுதியிலும் சேருங்கள்' என்பதுதான். அதுவும் "பல்லடம் சட்டமன்ற, கோயமுத்தூர் பாராளுமன்றத் தொகுதிகளில் சேர்த்தால் போதும். அப்புறம் நாங்கள், போராடிப் பிரச்னைகளைத் தீர்த்துக் கொண்டு விடுவோம்!" என்கிறார்கள் அந்த மக்கள், நம்பிக்கையுடன்!

**Tail Piece**

நல்ல குடிதண்ணீருக்கு மட்டும்தான் இந்த ஊரில் பஞ்சம் என்று நினைத்தீர்களானால், ஸாரி... தமிழக அரசின் 'தண்ணி'க்கும் இந்த ஊரில் பஞ்சம்தான். ஆம்; இந்தக் கிராமத்தில் சாராயக் கடை கிடையாது. ஆச்சரியமான விஷயம்தான்!

— கௌசல்யா

# சின்னச் சின்ன

3

முதலில் சுதாரித்தது நந்தகுமார்தான். அம்மாவின் கையைப் பிடித்து இழுத்ததில், இந்திரா அலறலைத் தவிர்த்தாள்.

"இரும்மா விசாரிக்கலாம்" என்றான். "நீ யாருய்யா?"

"தம்பி, ஊருக்குப் புதுசா?" எதிரிலிருந்தவன் மெதுவாகக் கேட்டான்.

"நாங்க வேணா புதுசு. எங்க மாமா இதே ஊருதான், அதனால் நாங்க ஒண்ணும் பயப்படமாட்டோம்."

"யாரு தம்பி உன்னைப் பயப்படச் சொன்னாங்க?" எதிரிலிருந்தவன் சிரித்தான். சிகரெட்டை வீசியெறிந்தான். காலரில் இருந்த கைக்குட்டையை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டான். பம்மியிருந்த தலைமுடியைக் கொஞ்சம் அடக்கிவிட்டால் சாது போலத்தான் தெரிவான் என்று இந்திரா நினைத்தாள்.

"நாங்க சங்கரலிங்கம் தெருவுக்குப் போகணும்" என்றாள், கொஞ்சம் பயம் தடவப்பட்ட குரலில்.

"அங்கே யாரு?"

"எங்க மாமா ஜெயபால் வீட்டுக்கு...."

"சைக்கிள் ஸ்பேர்பார்ட்ஸ் கடை வச்சிருக்காரே...."

"அவரேதான்...." இந்திரா அவசரமாய் ஆமோதித்தாள்.

"ஏம்மா, தனியாத் தேடிட்டுப் போகிற நேரமா இது? நீங்க ஜெயபாலுக்கு....?"

"அவர் எங்க அண்ணன்...."

"அப்படியா?" அவன் குரலில் ஆச்சரியம் இருந்தது. "தங்கை ஒருத்தி உண்டுன்னு ஒரு வார்த்தைகூடச் சொன்னதில்லையே ஜெயபால்?"

"உங்களுக்கு ஜெயபாலைத் தெரியுமா?"

"தெரியுமா—வா? இந்த ஊர்ல தானம்மா பொண் எடுத்தாரு. அந்தப் பொண்ணு எனக்கு ஒருவகைல தூரத்துச் சொந்தம். வாங்க, நான் வீடு வரைக்கும் வரேன். பெட்டியை இப்படிக் கொடுங்க...."

அவன் உரிமையோடு பெட்டியைப் பிடுங்கிக்கொண்டான். "லாஸ்ட் பஸ்ல வரேன்னு அவனுக்கு லெட்டர் போட்டிருக்கலாமே...?"

"லெட்டர் போட்டிருந்தோம்...." என்று இழுத்தாள் இந்திரா. ஆரம்பப் பயம் விலகியிருந்தது. அவனை முன்னே நடக்க விட்டுப் பின் தொடர்ந்தார்கள்.

"இது யாரு உங்க பையனா? பேர் என்ன தம்பி?"

"B. நந்தகுமார். உங்க பேரு?"

"பெரிய ஆளுதான் நீ. என் பேரு பாண்டியன்...."

"இனிஷியல்?"

"அட, இனிஷியல் இல்லேன்னா என் பேரை ஒத்துக்க மாட்டியா? N. பாண்டியன்."

"என். பாண்டியன், அப்படின்னா என்னோட பாண்டியன்னு அர்த்தமா?"

"நந்து!"

"விடுங்க. சின்னப் பையன்தானே. படிக்கிறியா தம்பி?"

"நாலாவது பாஸ் பண்ணி, அஞ்சாவது போயிட்டேன். அப்பா செத்துப் போயிட்டாரு. எங்க மாமா வீட்டுக்குக் கௌம்பி வந்துட்டோம். இனிமே பெரியவனா ஆகிற வரைக்கும் இந்த ஊருதான். உங்க ஊர்ல நல்ல ஸ்கூலெல்லாம் இருக்குதா ஸார்?"

"பரவாயில்லையே.... பையனுக்கு மரியாதையெல்லாம் தெரியுதே" பாண்டியன் சிரித்தான். இவனால் எப்படி இப்படி 'சட்



# கனவுகள்

ஆபா

சட்' என்று சிரிக்க முடிகிறது என்று இந்திரா வியந்தாள்.

"இருக்குப்பா.... ரெண்டு மூணு ஸ்கூல் இருக்கு. ஒரு இங்கிலீஷ் ஸ்கூல்கூட இருக்கு. இங்கே பசங்க எங்கே படிக்கப் போறாங்க?"

"பின்னே?"

"ஊருலே பெரிய தீப்பெட்டித் தொழிற்சாலே இருக்கு. நான்கூட அந்த ஃபாக்டரிலதான் வேலே செய்யறேன். இதோ தம்மாத்தூண்டு பசங்ககூட வேலேக்குப் போயிடறாங்க..." பாண்டியனின் குரலில் சின்ன வருத்தமோ, வேதனேயோ இழைந்திருந்தது. "பணக்காரப் பசங்களுக்குத்தான் ஸ்கூலு, படிப்பு எல்லாம்...."

பேசிக் கொண்டே அவர்கள் பிரதான சாலேயிலிருந்து, முனிசிபல் பார்க்கை ஒட்டிப் பிரிந்த தெருவிற்குள் நுழைந்தார்கள். ஏதோ ஒரு வீட்டில், ஏதோ ஒரு குழந்தை கெட்ட கனவில் விழித்துச் சங்குக் குரலே எழுப்பியது. 'ராட்சஸி, என்னேத் தூங்கவே விடாது....' என்று பெண்குரல் சபித்துக் கொண்டே சமாதானம் செய்தது. ஆஸ்பெஸ்டாஸ் போட்ட டாக்கீஸிலிருந்து இரவுக் காட்சி நாயகி வில்லனுக்குச் சவால் விட்டுக் கொண்டிருந்தாள்.



"நீங்க என்னே மன்னிச்சுரணும்...." என்றான் பாண்டியன் திடீரென்று.

"எதுக்கு?" இந்திரா புரியாமல் பார்த்தாள்.

"ஓடி வந்த கேஸான்னு கேட்டதுக்கு... போன வாரம் பக்கத்தூர்லேர்ந்து ஒரு பொண்ணு ஓடி வந்திருச்சு.... கூப்பிட்டவன் கையை விரிச்சிட்டான். பொதுக் கிணத்துல விழுந்து.... இப்ப அந்தக் கிணறே உபயோகமில்லாமல் போயிடிச்சு....."

"ஐயையோ...." இந்திரா பதறினாள், தானே விழுந்துவிட்ட மாதிரி.

பாண்டியன் நந்தகுமாரின் கையைப் பிடித்து இழுத்தான். "பார்க் ஓரமா போகாதே, நந்தகுமார்...."

"ஏன் ஸார்?"

அவன் கேள்வி முடிவதற்குள் அந்தப் பார்க்கின் அடர்த்தியான ஒரு மரத்திற்குக் கீழிருந்து, "யாரோ வர்றாங்கய்யா" என்று பெண்குரல் கேட்டது. ஸ்விட்ச் போட்டாற் போல இரண்டு உருவங்கள் எழுந்து உட்கார்ந்தன. நிழலாக அந்தப் பெண் தெரிந்தாள். இயல்பாய் இருப்பதுபோல் ஒரு சினிமா ராகத்தை இழுத்துக் கொண்டே, விரிந்திருந்த தலேமுடியைக் கோதிக் கொண்டாள். இன்னொரு உருவம் விலகி அடுத்த மரத்தடிக்குச் சென்று குத்துக்காலிட்டு அமர்ந்து கொண்டது.

இந்திராவுக்கு அவமானமாக இருந்தது. அந்தக் காட்சி நந்துவின் மனத்தில் எப்படிப் பதியப் போகிறது?

நல்லவேளே, நந்தகுமார் எதுவும் கேட்கவில்லே.

"பத்திரிகைலேகூட வந்துபார்த்துஎழுதிட்டாங்க. ஊர்ல இருக்கிற ஜனம், 'நம்ம ஊர்ப் பார்க்கு படம் பத்திரிகைல வந்திருக்குடா'ன்னு கூடிக் கூடிப் பெருமையாய் பேசிக்கிட்டாங்க. தூத்தெறி பெருமைப்படற விஷயமா இது?" பாண்டியன் பார்க்கையே கேலமாகப் பார்த்தான்.

''இன்னும் எவ்வளவு தூரம் ஸார் போக ணும்?'' நந்தகுமார் இடையில் வெட்டிக் கேட்டான்.

''இதோ வீடு. வந்தாச்சு. இதுதான்....'' பாண்டியன் அந்த வீட்டு வாசல்முன் நின் ருன். கையிலிருந்த பெட்டியைக் கீழே வைத்துவிட்டு, சுவாதீனமாக கேட் கொக்கியை எடுத்துத் திறந்தான்.

இடுப்பளவு காம்பவுண்டு சுவரின் காவலில் ஒரு சிகரெட் பெட்டியைப் போல வீடு. ஜன்னல் சதுரங்களில் கண்ணாடிகள். மறைத்துத் திரைகள். நிலாவை எதிரொலிக் கும் டிஸ்டம்பர். நித்திய மல்லியின் வாசம்.

கீங் என்று கேட் சப்தித்தது. வழிவிட் டது. 'நாளைக்கு முதல் வேலையாக இதற்கு எண்ணெய் போட வேண்டும்' என்று இந்திரா நினைத்துக் கொண்டாள். நந்த குமார் புது டூரிஸ்ட் போல் சுற்றுப்புறத்தில் ஆர்வம் பதித்தான்.

பாண்டியன் சிமெண்ட் பாதையில் நடந்து, மொஸைக் படியில் கால் வைத்து சுவிட்சை அழுத்த, உள்ளே சங்கீத கிணுகிணு. சிறு சலசலப்பு.

''யாரு?''

''பாண்டியன், ஜெயபால்.''

கதவு திறந்து ரிப்பன் வெளிச்சம் அவர்கள் மீது படிந்தது. இன்னும் திறக்க, அங்கே ஜெயபால். கீழே விழுந்து கொண்டிருந்த லுங்கியை ஒற்றைக் கையால் பிடித்திருந் தான். கண்களைக் கசக்கி விட்டுக் கொண் டான்.

''விருந்தாளிங்கப்பா உங்க வீட்டுக்கு! உன் தங்கச்சிதான். கடைசி பஸ்லே வந்து எறங்கி பஸ் ஸ்டாண்ட்லே திருதிருன்னு முழிச்சுக்கிட்டிருந்தாங்க....''

ஜெயபால் இந்திராவையும் நந்தகுமாரை யும் தீவிரமாகப் பார்த்தான்.

''உன் மருமான் பெரிய ஆளுப்பா!'' பாண்டியன் நந்தகுமாரின் முதுகில் செல்ல மாகத் தட்டினுன். ''சரி, ஜெயபால், நான் வரேன்.''

சரேலென்று, இறங்கி இருட்டில் கலந் தான். அவனுக்கு ஒரு நன்றிகூடச் சொல்ல வில்லையே என்று அப்புறம்தான் இந்திரா வுக்கு உறைத்தது.

''யாருங்க, அது இந்நேரத்திலே?'' என்று ஜெயபாலின் முதுகிலிருந்து குரல் வந்தது. இந்திரா ஆதரவு நாடும் முகத்துடன், ''நாந் தான் அண்ணி'' என்ருள்.

''அத்தை, நந்து அத்தை'' என்ருன் நந்த குமார்.

அண்ணி இத்தனை வருடங்களில் கொஞ்சம் பருத்திருந்தாள். படுக்கையில் கூடப் பிரிய மனமில்லாத காசு மாலையும், கோதுமை இரட்டை வடமும் மார்பில் புரண் டன.

''என்னம்மா இந்தநேரத்திலவந்திருக்கே?'' ஜெயபாலின் குரலில் லேசான எரிச்சல் இருந்தது. பாவம் தூக்கம் கலைந்த வேதனையா யிருக்கும் என்று சமாதானம் செய்து கொண்



**NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD)**
**(Eye Donation Information Centre)**
**1-57, North Mada St., P.O. Tirumala Hills. Via Tirupati 517 504**

ஸ்ரீ காஞ்சி சங்கராச்சார்யார் ஸ்வாமிகளின் அனுக்ரஹத்துடனும் கருணை உள்ளம் படைத்த வாசகர்களின் விசேஷ உதவியுடனும் ஸ்ரீ வெங்கடாசலபதி திருக்கோவில் கொண்டிருக்கும் இந்தத் திருப்பதி – திருமலை புண்ய க்ஷேத்திரத்திலிருந்து கண்களை இழந்தவர்களுக்கு இந்த நவஜீவன் சேவா கேந்திரம் பலவிதங்களிலும் உதவி வருவது வாசகர்கள் அறிந்ததே.

## பணிவுடன் கூடிய ஒரு வேண்டுகோள்

விழிகளை இழந்தவர்களுக்கு தற்போது இந்த சேவா கேந்திரம் அளித்து வரும் சில தொண்டுகளை எதிர்காலத்தில் மேலும் விசேஷமாக விஸ்தரிக்கும் பொருட்டு அன்பார்ந்த வாசகர்களின் உதவியை பெரிதும் வேண்டுகிறோம். கலியுக கண்கண்ட தெய்வமான, வேண்டுவோருக்கு வேண்டியதை அளிக்கும் ஸ்ரீ ஏழுமலையான் திருக்கோயில் கொண்டிருக்கும் இந்த புண்ய க்ஷேத்திரத்தில் எந்த ஒரு தொண்டு செய்தாலும் அதற்கு ஆயிரம் மடங்கு அதிகம் புண்ய பலன்கள் கிடைப்பதாக புராணங்கள் கூறுகின்றன. விழிகளை இழந்து வாழ வழி தெரியாமல் பரிதவித்து வரும் பல லட்சம் மக்களில் ஒரு சிலருக்காவது நித்யம் அன்னதானம் வழங்கி சங்கீதமும் கைத்தொழிலும் கற்றுக் கொடுத்து புனர்வாழ்வு அளிக்க முயற்சித்து வருகிறோம். மேலும் விழியற்றவர்களுடன் ஏனைய உடல் ஊனமுற்றோர்களுக்கும் ஆதரவற்ற ஏழைப் பெண்களுக்கும் உதவிகள் அளிக்கவும் திட்டமிட்டு வருகிறோம்.

## உங்களுக்காக சில தொண்டுகள்:

மேற்குறிப்பிட்ட புனிதத் தொண்டின் பொருட்டு ரூ 501/– (ரூபாய் ஐநூற்று ஒன்று) அல்லது அதற்கு மேலும் அனுப்பும் கருணை உள்ளம் படைத்த வாசகர்களின் சார்பாக சில தொண்டுகளை உங்களுக்காகச் செயல்படுத்துகிறோம். 1. நீங்கள் குறிப்பிட்டு எழுதும் ஒரு நன்னாளில் (உங்களது திருமண நாள் அல்லது குழந்தைகளின் பிறந்த நாள் அல்லது வேறு முக்ய விசேஷ நாள்) உங்கள் சார்பாக உங்கள் பெயர், கோத்ரம் நட்சத்திரத்தில் ஸ்ரீ வெங்கடேசப் பெருமானுக்கு விசேஷக் கட்டணம் செலுத்தி பூஜா அர்ச்சனை செய்விக்க ஏற்பாடு செய்கிறோம். 2. விசேஷ பிரார்த்தனையுடன் ஸ்ரீ வாரி மஹா பிரசாதம் ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பி வைக்கிறோம். 3. முன்னதாக தேதி குறிப்பிட்டு ஊர்ஜிதம் செய்து கொண்டு திருமலைக்கு யாத்திரையாக வரும் அன்பர்களுக்கு இலவசமாக இடவசதி அளிப்பதுடன் தேவையான உதவிகளும் அளிக்கப்படும். (அடுத்த ஒரு வருஷம் வரை மட்டும்) 4. நீங்கள் குறிப்பிட்டு எழுதும் ஒரு நன்னாளில் விழியற்றவர்களுக்கு உங்கள் சார்பாக அன்னதானம் வழங்கப்படும்.

மேலும் ரூ 51/– அனுப்பும் அன்பர்களின் சார்பாகவும் நீங்கள் குறிப்பிட்டு அனுப்பும் தினத்தன்று உங்கள் சார்பாக விசேஷ பிரார்த்தனை செய்வித்து நீங்கள் அனுப்பும் தொகையிலிருந்து ஒரு பாகம் ஸ்ரீ வாரி ஹுண்டியில் ஸமர்ப்பித்து மஹா பிரசாதமும் ரிஜிஸ்தர் தபாலில் அனுப்புவதுடன் விழியற்றவர்களுக்கு இனிப்புகளும் வழங்க ஏற்பாடு செய்கிறோம்.

ரூ 500 அல்லது அதற்கு மேல் டொனேஷன் வழங்கும் அன்பர்களுக்கு வருமான வரிச் சலுகை (Income Tax Exemption, under 80 G) அளிக்கப்படும். டொனேஷன்களை "நவஜீவன் ப்ளைண்ட் ரிலிப் சென்டர், திருமலை' என்கிற பெயருக்கு க்ராஸ்ட் செக்/ட்ராப்ட் மூலமாக அனுப்ப வேண்டுகிறோம்.

"விழியற்ற சகோதர – சகோதரிகளுக்கும் தொடர்ந்து ஆதரவு அளித்து வரும் கருணை உள்ளம் படைத்த வாசக அன்பர்களுக்கும் எமது மனம் கனிந்த தீபாவளி நல்வாழ்த்துக்கள்.

# மாதம் ஒரு மாவட்டம்

## புதுக்கோட்டை மாவட்டத்தினருக்கு நினைவூட்டு



கல்கியின் சமுதாயப் பணியில் பத்தாவது மாவட்டம் புதுக்கோட்டை மாவட்டம்தான். எனவே, புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள குறைகளும், அநீதிகளும், முறைகேடுகளும் தவிர, பெரும் சாதனைகள் பற்றிய கடிதங்களும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.11.86

உடனடியாக எழுதி அனுப்புங்கள்!

— ஆசிரியர்

டாள் இந்திரா.

"லெட்டர் போட்டிருந்தேனே அண்ணா...."

"லெட்டரும் வரலே, கிட்டரும் வரலே...." அண்ணி அவசரமாய்ச் சொன்னாள்.

நந்தகுமார் யாருக்காகவும் காத்திருக்காமல் அவர்களை லேசாக நகர்த்தி உள்ளே நுழைந்தான். செருப்புகள் வைக்கப்பட்டிருந்த இடத்திற்கருகில் பையை இறக்கி வைத்தான். இரண்டு கைகளாலும் சுமந்து பெட்டியை அதனருகில் கொண்டு வைத்தான்.

மூன்று ஜோடி செருப்புகள். சின்ன சைஸ் ஷூ ஒரு ஜோடி.

இந்திரா தயங்கி நுழைந்தாள்.

சின்ன ஹால். சுவரில் சில ஃபோட்டோக்கள். ஜெயபால் ஒவ்வொரு ஃபோட்டோவிலும் பிரதானமாயிருந்தான். அப்பா செத்துப்போன அன்றைக்கு அவரை நாற்காலியில் அமர்த்தி, 'நெத்தில பெரிசா பொட்டு வையுங்க.... அப்பத்தான் ஃபோட்டோவுல நல்லா விழும்' — அப்பா நெற்றியில் இப்போது நிஜக் குங்குமம், ஃபோட்டோக் குங்குமத்தை மறைத்திருந்தது.

இந்திராவைப் போல் வாடிப்போன நித்தியமல்லி சரங்கள் உதிர்ந்திருந்தன.

"சாப்டாச்சா?"

ஜெயபால் சோஃபாவில் உட்கார்ந்து, டப்பாவிலிருந்து சிகரெட்டைப் பொறுக்கிக் கொண்டான். உதட்டில் பொருத்தி புஃப் என்று புகைவிட்டான்.

"சாப்டாச்சு அண்ணா...." என்றாள் இந்திரா. நந்து பசி தாங்கமாட்டான். பரவாயில்லே, பையில் ஒரு பிஸ்கெட் பாக்கெட் இருக்கிறது, போதும்.

நந்தகுமார், இறங்க முயலும் டிராயரை ஒரு கையால் இழுத்துக் கொண்டே சுவரில் தன் அம்மாவின் படம் இருக்கிறதா என்று தேடினான். ஏமாந்தான்.

"விடிஞ்சப்புறம் பேசிக்கலாம். மொதல்ல படு."

ஸ்டோர் ரூமைக் கொடுத்தார்கள். மேலே சின்னதாய் ஒரு திறப்பு இருந்தது. ஆகாயத்தின் பஞ்சு மேகங்கள் தெரிந்தன. நடுவில் இடத்தை அடைத்த கள்ளிப் பெட்டியை நகர்த்த முயற்சி செய்தபோது அது கண்ணில் தட்டுப்பட்டது.

நீல நிற இன்லெண்ட் லெட்டர். இந்திரா தங்கள் வருகை பற்றி ஜெயபாலுக்கு எழுதிய கடிதம். 'லெட்டரும் வரலே, கிட்டரும் வரலே.'

கரப்பு நாற்றமும், புதுச் சுண்ணாம்பு வாசமுமாக அறைக் காற்று சங்கடமாயிருந்தது. நந்தகுமார் வெற்றுத் தரையில் (ஜமக்காளம்கூட எதுவும் ஸ்பேரா இல்லையே, இந்திரா' — 'பரவாயில்லே அண்ணா') உருண்டிருந்தான்.

இந்திரா புடைவைத் தலைப்பை விரித்து ஒடுங்கிப் படுத்தாள். மனம் நிலையில்லாமல் தவித்தது.

இனி இந்த இடம்தானா சாஸ்வதம்? ஜெயபாலின் கண்களில் ஒரு நட்போ, அங்கீகாரமோ இல்லையே, ஏன்?

அழுகை வந்தது. கூடவே கோபம் வந்தது. கோபம் அவளை இப்படி அநாதரவாக விட்டுப் போன கணவன்மேல்.

அடுத்த அறையில் சலசலப்பு கேட்டது.

"என்னங்க" அண்ணியின் குரல்.

"என்ன சுகந்தி?" ஜெயபாலின் குரலில் கொஞ்சம் காதல், கொஞ்சம் காமம், கொஞ்சம் வேட்கை, கொஞ்சம் வெறி.

"உங்க தங்கச்சி இப்படித் தடால்னு நெசமாவே வந்து இறங்கிட்டாளே.... என்ன செய்யப் போறீங்க?"

"என்ன செய்யணும்?"

"நாம் என்ன சத்திரமா கட்டி வச்சிருக்கோம். இன்னும் ஒரு வாரத்துக்குள்ள உங்க அருமைத் தங்கச்சியையும், ஆசை மருமவனையும் இந்த வீட்டை விட்டுக் கௌப்பியாகணும்...."

"ம்.... ம்....." என்றான் ஜெயபால், ஓர் ஆமோதிப்பாய்.

(தொடரும்)

"அவர் யாருங்க?"

— எதிர்ச் சுவரில் பாய்ந்த ஓட்ட வீரனைக் காட்டினாள் மல்லிகா.

"அவர்தான் கார்ல் லூயீஸ்" ஜகன் தன் அழகு மனைவியை அணைத்தபடி கூறினான்.

இருவருக்கும் சில நாட்களுக்கு முன்தான் திருமணம் நடந்தது. அதுவும் திடீர்க் கல்யாணம். ஆனால், பெற்றோர் பார்த்து முடிவு செய்ததுதான்.

"அப்படின்னா?"

"லாஸ் ஏஞ்சல்ஸ் ஒலிம்பிக்ஸ்ல ஹீரோ இவர்!"

"ஐயையோ, நான் இங்கிலீஷ் படம்லாம் பார்க்கறதில்லீங்க" அசடு வழிந்தாள் மல்லிகா.

இருவரும் திருமணத்திற்குமுன் சிறிதும் அறிமுகமற்றவர்கள்.

ஜகன் செல்லமாக மனைவியின் கன்னத்தைத் தட்டினான். "இது சினிமாப் படமில்லை. 1985ல் நடந்த நிஜ ஒலிம்பிக் பந்தயம். அதுலே இவர் ஃபோர் கோல்டு மெடல் வாங்கினார் தெரியுமா?" அளவுகடந்த வியப்புடன் கூறினான் ஜகன்.

"ம்."

"நான்கூட ஸ்போர்ட்ஸ்ல நிறைய ப்ரைசஸ் வாங்கியிருக்கேன். அது மட்டுமில்லை, எனக்கு....."

அவளோ, சுவாரஸ்யமின்மையால்

# பாதைகள் பழுதில்லை

இராஜா பாலச்சந்தர்



சுவரில் ஓடிய பல்லியை வெறித்தாள்.

வாசலில் காலடியோசை கேட்டது.

''ஸாரி ஃபார் த டிஸ்ட்ரஃபன்ஸ்'' மத்தாப்புச் சிரிப்புடன் உள்ளே நுழைந்தாள் சுகந்தா. இருபது வயது இளமை அவளிடம் குலுங்கியது.

''நாட் அட் ஆல்'' என்ற ஜகன் ''மீட் மை ஒய்ஃப் மல்லிகா, மல்லி ஷி ஈஸ் சுகந்தா.''

''நான் இவர் ஸ்டூடண்ட்,'' எனச் சுய அறிமுகம் செய்து கொண்டாள் சுகந்தா.

மல்லிகாவுக்கு அவளை ஞாபகம் இருந்தது. திருமணத்தின்போது சுகந்தா பம்பரமாகச் சுழன்றது யாரையுமே கவர்ந்திருக்கும்.

அதன்பிறகு சுமார் முப்பது நிமிடங்கள் அங்கே இருந்தாள். சுகந்தா. ஜகனுடன் சிரித்துச் சிரித்துப் பேசினாள்.

''அப்புறம் சார், அவளால ஃபைவ் ரவுண்ட்சுக்கு மேலே ஓட முடியல்ல. பாவம், ஸ்டாமினா அவுட்''-கூறிவிட்டுக் கலீரெனச் சிரித்தாள். விளைவாக, கன்னக் குழிகளைச் சுற்றி சிவப்பேறியது.

''ஸோ, யூ வன் டுடே, கன்க்ராஜுலேஷன்ஸ்'' ஜகனும் அவளுடன் உற்சாகமாகப் பேசினான்.



தான் தனிமைப்படுத்தப்பட்டதாக உணர்ந்தாள் மல்லிகா. எனவே சுகந்தா போனபின் புயலுக்கு முன் நிலவும் நிசப்தச் சூழல் அங்கே குமிழியிட்டிருந்தது.

சுற்றிலும் பசுமையான மரங்கள். அடர்ந்த விளையாட்டு மைதானம். இதயத்துக்கு இதமளித்தது அந்த இடம்.

ஜகன் அதிகமாக வற்புறுத்திய பின்தான் இங்கு வரச் சம்மதித்தாள் மல்லிகா. ''வேணாங்க. எனக்கு அந்த மாதிரி இடத்துக்கு வந்து பழக்கமில்லேங்க...''

இப்போதும் அவளுக்கு அப்படித்தான். சூழ்நிலைக்கு ஒட்டாத உள்ளத்துடன் ஒடுங்கி நின்றாள் அவள்.

அருகாமையில் சிலர் ஆர்வமாகப் பயிற்சிகளில் ஈடுபட்டிருந்தார்கள். அதில் பலர் பருவப் பெண்கள்.

அவர்களின் குறைந்த உடை மல்லிகாவுக்குச் சற்றும் பிடிக்கவில்லை.

''ஹாய்....'' பழக்கமான குரல் கூப்பிட்டது. திரும்பினாள் மல்லிகா.

மாறாத சிரிப்புடன் சுகந்தா நின்றிருந்தாள்.

மல்லிகாவுக்கு லேசான அதிர்ச்சி. நேற்று சோளியும், புடைவையுமாக வந்தவள். இன்று ஜீன்சும், டீ-சர்ட்டும் அணிந்து ஒயிலுகின்றாளே!

''ஷல் வி ஸ்டார்ட்?'' ஜகன் கேட்டான்.

''ஐ'ம் ரெடி'' என்ற சுகந்தா உடனே தனது ஜீன்ஸை அனாவசியமாக உருவினாள் நீல ஷார்ட்சுக்குக் கீழே வாழைத் தண்டாகத் தொடங்கிய சிவந்த தொடைகள் மாலை வெயிலினால் மெருகேற்றப்பட்டன.

மீண்டும் மல்லிகாவுக்கு அதிர்ச்சி.

அவளின் மருட்சியைப் புரிந்த சுகந்தா சிரித்தாள். ''வி ஹாவ் டு ப்ராக்டிஸ்.''

'கண்றாவி... கண்றாவி' மனத்துக்குள் திட்டினாள் மல்லிகா.

''மல்லிகா இங்கேயே வெயிட் பண்ணு'' என்ற ஜகன் சுகந்தாவை அழைத்துக் கொண்டு மைதானத்தின் நடுப்பகுதிக்கு நடந்தான்.

அங்கே, நீள்வட்டச் சாலையாக ஓடிய ட்ராக்கில் இருவரும் ஜாகிங் ஆரம்பித்தார்கள்.

பத்துச் சுற்றுகள் முடிந்தன. மீண்டும் புல்வெளிக்கு வந்தார்கள்.

அடுத்தது வார்மிங் அப். நெக்ரொட்டேஷனில் ஆரம்பித்து. டோ டச்சிங் வரை நீண்டது பயிற்சி.

நடுவில் ட்ரங்க் ரொடேஷனை சுகந்தா ஆர்வமாகச் செய்தபோது கவர்ச்சியாகத் தோன்றினாள். ஆனால், அது மல்லிகாவுக்கு அருவருப்பாகத் தெரிந்தது.

சுகந்தா கூச்சமின்றித் தன் அத்தனை அங்கங்களையும் அசைத்துப் பயிற்சியில் ஈடுபட்டதைத் தவறான காரியமாக உணர்ந்தாள் மல்லிகா. கூடவே, தன் கணவனும் அவளுடன் இணைந்து செயல்படுவது மல்லிகாவின்



## புதுக் கவிதைப் போட்டி-3

ப்ளஸ் டூ மற்றும் கல்லூரி மாணவர்களே!

23.11.86 'கல்கி' இதழில் ஒரு சுவையான கட்டுரை இடம் பெறவுள்ளது — அதன் தலைப்பு 'வைதேகி காத்திருக்கிறான்!' 'வைதேகி'யை படித்துவிட்டு நகைச்சுவை

ஆத்திரத்தைச் சுண்டிவிட்டது. காரணம். அவனுக்கு எல்லாமே புதியவை.

நந்தனம் ஒய்.எம்.சி.ஏ. உடற்கல்விக் கல்லூரியை மானசீகமாகக் காதலிப்பவன் ஜகன்.

அங்கே படிக்கின்ற காலத்தில் 'ஈவினிங் ஆக்டிவிட்டீஸ்' முடிந்ததும், அனைத்து மாணவர்களும் 'ஹாட்'டுகளுக்குப் பறந்துவிடுவார்கள்.

ஆனால், ஜகன் மட்டும் அந்தப் பசிய மைதானங்களை ஓடிக் கடந்து கொண்டே இருப்பான். அவன் பாதம் படாத அங்குலங்கள் அந்த வளாகத்தில் நிச்சயம் இருக்க வாய்ப்பில்லை.

இருட்டி வெகு நேரம் ஆனபின்னாலும் பயிற்சிகள் தொடரும். யாரும் பார்க்காத வேளைகளில் அந்த மைதானங்களில் உருண்டு புரண்டு தன்னுள் மோதிய இனம் புரியாத ஆசைகளையும், தவிப்புகளையும் போக்கிக் கொள்ள அவன் முயல்வதுண்டு.

வேலை பெறும் நோக்கத்தோடு மட்டுமின்றி, வேறு பல இலட்சியங்களையும் மனதிற் கொண்டே இந்தப் படிப்பைத் தேர்ந்தெடுத்தான் ஜகன்.

விளையாட்டுத் துறையில் தன்னால் எந்த தேசியச் சாதனைகளையும் நிகழ்த்த முடியாமல் போய்விட்டதில் அவனுக்கு மிகவும் மனக் குறை.

இருந்தாலென்ன? தன்னால் முடியாததைத்தான் ஒரு சிறந்த பயிற்சியாளராகப் பணி புரிவதன் மூலம் நிறைவேற்றிக் கொள்ள இயலுமே!

திண்ணமாக நம்பினான் ஜகன்.

அந்த ஆசை அவன் உடல் முழுவதும் 'ஸ்பிரின்ட்' அடித்துக் கொண்டே இருந்தது.

படிப்பும் முடிந்தது.

உடனே, தன்னைப் போன்ற ஒரு லட்சியவாதியைத் தேடினான். அந்த வகையில் கிடைத்தவள்தான் சுகந்தா.

ஒருமாலைவேளையில்மந்தகாசப்புன்னகையுடன் ஓடிக் கொண்டு இருந்தவளைக் கண்டு பிடித்தான் ஜகன்.

ஆர்வத்தோடு சம்மதித்தாள் சுகந்தா.

அன்று ஆரம்பித்த பயிற்சிதான். அதன் பிறகு, இரவு, பகல் மறந்த நிலையில் கடுமையாகப் பயிற்சியளித்தான் ஜகன்.

தன்னுள்ளே பொதிந்திருந்த திறமைகளை அறிந்து மகிழ்ந்தாள் சுகந்தா. அவை வளர்வதை உணர்ந்து பெருமிதப்பட்டாள்.

ஆரம்பகட்டமாக மாவட்ட அளவிலான போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகளை வென்றாள். பிறகு, மாநிலம் தழுவிய வெற்றிகளை அளைத்துக் கொண்டாள்.

சில மாதங்களுக்கு முன், தேசிய சாதனையை நிகழ்த்தி ஜகனின் லட்சியத்தை நிறைவேற்றினாள் சுகந்தா.

இருவரும் மகிழ்ந்தனர். அவர்கள் மட்டுமா? முழு நாடே. பயனாக, தற்போது அவர்களே எதிர்பாராத அரிய சந்தர்ப்பம் தேடி வந்துள்ளது.

உலகம் தழுவிய ஓட்டப் பந்தயத்தில் கலந்து கொள்ளும் வாய்ப்பை அரசாங்கம் ஜகனின் மாணவியான சுகந்தாவுக்கு அளித்துள்ளது.

இடைவிடாத கடினப் பயிற்சிகள் தொடர்ந்தன.

இந்த வேளையில்தான் ஜகனின் திருமணம் திடீரென நடந்தது. சில தவிர்க்க முடியாத குடும்பக் கடமைகள் கருதி சம்மதித்தான் ஜகன்.

ஆனால், அவனுக்கு மனைவியாக வந்த மல்லிகாவோ, விளையாட்டில் விருப்பமற்றவள். அவள் வளர்ந்த நிலைமை அப்படி.

வீட்டிற்குள் புயலடிக்கத் தொடங்கி விட்டது.

"மல்லி, என்ன நீ இப்படி....?" ஜகன் மனம் வெதும்பிக் கேட்டான்.

"போதும் நிறுத்துங்க. வெக்கங்கெட்டத்தனமா அவ நடந்துக்கறதும் அதுக்கு ஏத்த மாதிரி நீங்க எழையறதும். ச்சீ....."

துடித்தான் ஜகன். "நீ தப்பாப் பேசறே மல்லிகா."

"ஆமா, அதுக்கு என்னை எதுக்காகக் கட்டிக்கறது? பேசாம அவளையே...."

மல்லிகாவை அறைந்தான் ஜகன்.

ஓலமிடுவாள் என எதிர்பார்த்தான். அவளோ, விசும்பினாள். "அவ ஒங்களை நல்லா மயக்கிட்டா. இது நான் எதிர்பார்த்ததுதான்."

"ப்ளீஸ் மல்லி. மறுபடியும் இப்படிப் பேசாதே. சுகந்தா நல்லவ. அவ என்மேலா ஸ்டூடண்ட், நான் அவ கோச். எங்களுக்குள்ள இருக்கிற ரிலேஷன்ஷிப் அவ்வளவுதான்."

"பொய். சுத்தப் பொய். உங்க ரெண்டு பேருக்கும் ரகசியத் தொடர்பு இருக்கு. அதான் இப்படி அவ பின்னாலேயே ஓடறீங்க ச்சீ...."

மினிர ஒரு புதுக் கவிதை எழுதுங்கள். எட்டே வரிகளில் சிரிக்க வைக்க வேண்டும்.

* போஸ்ட் கார்டின் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதுங்கள்.

* கார்டின் மறுபக்கத்தில் பள்ளி அல்லது கல்லூரி முத்திரையைப் பெறவேண்டும்.

* உங்கள் பெயரும் விலாசமும் தெளிவாக எழுதப்பட்டிருக்க வேண்டும்.

கவிதைகள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி: 1.12.86

முதல் பரிசு: ரூ 100/—

இரண்டாம் பரிசு: ரூ 25/— தவிர ஆறு மாதங்களுக்குக் 'கல்கி' இலவசம்.

தவிர, பிரசுரமாகும் அனைத்துக் கவிதைகளுக்கும் சன்மானம் உண்டு.

---

ஜகன் பொறுமையைக் கடைப்பிடித்தான். ''சரி, எப்போ இருந்துன்னு நெனைக்கறே?''

அவளின் கன்னங்கள் ஆத்திரத்தால் துடித்தன. ''அந்த எழவையும் நானே சொல்லணுமோ?''

''ஆமா.''

''கல்யாணத்துக்கு முன்னாடி இருந்தேதான்'' அழுத்தமாகக் கூறினாள் மல்லிகா.

ஜகனுக்குச் சிரிப்பு வந்தது. ''அடியே பைத்தியக்காரி, அது உண்மைன்னா நாங்க மேரேஜ் செஞ்சுக்கிட்டிருப்போமே?''

''ம்.... அப்படின்னா, கல்யாணத்துக்குப் பின்னாடிதானா இந்த அசிங்கமெல்லாம்?'' தடுமாறினாள் மல்லிகா.

மேலும் சிரித்தான் ஜகன். ''சந்தேகம் உன் புத்தியைச் சாப்டுடிச்சுடி. நான் பேச்சிலரா இருந்தப்ப இல்லாத தவறான எண்ணங்களா இப்போ எங்களுக்கு வந்துடப் போகுது? அடியே, சுகந்தா எனக்கு சிஸ்டர் மாதிரிடி. அதுகூட தப்பு. அவ எனக்கு ஒரு குழந்தை. தெரிஞ்சுக்க.''

''ஆகா, அதை நான் நம்பணுமோ?'' சினந்தாள் மல்லிகா.

வெளியே காலடியோசை கேட்டது. போய்ப் பார்த்தான் ஜகன்.

கலங்கிய விழிகளோடு நின்றிருந்தாள் சுகந்தா.

''எப்போ வந்தே சுகந்தா?''

''அப்பவே.''

''நீ.... தப்பா நெனைக்க வேண்டாம். வந்து....'' குளறிய ஜகனை அவள் பரிதாபமாகப் பார்த்தாள்.

''அவளோட அங்கே என்ன சல்லாபம்? உள்ளே வாங்க உடனே.'' மல்லிகாவின் குரல் முன்னறையிலிருந்து அதிர்ந்தது.

ஆத்திரமாகத் திரும்பினான் ஜகன். அதே சமயம், தெருவை நோக்கி ஓடினாள் சுகந்தா.

''சுகந்தா.... நில்லு.....

ஜகன் பலமுறை கூப்பிட்டும் அவள் நிற்கவில்லை.

புல்லட் சாலை விதிகளை மீறியபடி சீறிப் பாய்ந்தது. ஓட்டியவன் ஜகன்.

உணர்ச்சி வயப்பட்ட நிலையில் சூழ்நிலைகளை மறந்தவனாக பைக்கைச் செலுத்தினான்.

ஆயிரம் சிந்தனைகள் அவனுள் ஆர்ப்பரித்தன.

முதலில் சுகந்தாவைப் பார்த்தாக வேண்டும். அவள் அறிவில் பண்பட்டவள். எடுத்துக் கூறினால் ஏற்றுக் கொள்வாள்.

நாம் தவறு செய்யாதபோது மற்றவர்களின் கீழ்த்தரமான விமர்சனங்களை உதாசீனப் படுத்திவிட வேண்டும் என அவளிடம் சொல்ல வேண்டும்.

பழையபடி பயிற்சிகளை இணைந்து மேற்கொள்ள அவளை இசைய வைக்க வேண்டும். வெற்றி பெற வேண்டியதின் அவசியத்தை அவளுக்கு உணர்த்த வேண்டும்.

நிச்சயம் புரிந்து கொள்வாள்.

ஒரு சாலை வளைவில் அனேகமாக சாய்ந்து விடும் நிலையில் கடந்தது புல்லட்.

மைதானம் ஏறக்குறைய வெறுமையாகக் காட்சியளித்தது.

அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிலர் பயிற்சிகளில் தீவிரப்பட்டிருந்தனர்.

களைத்துப் போனவனாகப் புல்வெளியைக் கடந்தான் ஜகன். நிச்சயம் சுகந்தா இங்கு இருக்கலாம்.

பார்வையைச் சுழற்றினான்.

அவன் யூகம் சரியாக இருந்தது. ஒரு மரத்தின் வேரில் யோசனையோடு அமர்ந்திருந்தாள் அவள்.

நெருங்கினான். அழைத்தான். ''சுகந்தா...''

அவள் திரும்பினாள்.

''வந்து..... வந்து..... சுகந்தா.....''

தயக்கத்தோடு அவனை இடைமறித்தாள் அவள். ''நீங்க எதுவும் சொல்ல வேண்டாம் சார்.''

ஆனால் அவன் கெஞ்சினான். ''மல்லிகா அப்படிப் பேசினதுக்காக நான் மன்னிப்புக் கேக்கறேன் சுகந்தா.''

அவள் நிதானமாகக் கூறினாள்: ''எதுக்காக இந்த அனாவசியமான மன்னிப்பு?'' சில நிமிடங்கள் நிறுத்தினாள். ''நாம தவறு செய்யாதபோது மற்றவங்களோட கீழ்த்தரமான விமர்சனங்களை உதாசீனப்படுத்திடணும். தெரியுமா?''

''ம்..... ம்.....''

''எஸ். பழையபடி நாம ப்ராக்டிஸ் பண்ணணும். ஏன்னா, நாம வெற்றி பெற வேண்டியது ரொம்ப அவசியம் சார். ஆமா, சந்தேக மனம் கொண்ட ஒரு பெண்ணை நாம திருப்திப் படுத்த விரும்பினா, நம்மை நம்பி இருக்கிற எழுபது கோடி மக்களை ஏமாற்ற வேண்டி இருக்கும் இல்லையா?'' சுகந்தாவின் குரல் தழுதழுத்தது. ''மல்லிகாவை என்னால் சரிப் படுத்த முடியும் சார்.''

ஆச்சரியத்தால் ஜகனின் விழிகள் பனித்தன. ''தேங்க் யூ சுகந்தா.''

இருவரும் (இலட்சியப் பாதையில்) ஓட த் தொடங்கினார்கள்.

பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

**16**

"என்னால் நம்பவே முடியலை தாமஸ்" என்றான் சுகுமார் சட்டையைக் கழற்றிக் குறி பார்த்து நைலான் கயிற்றில் எறிந்துவிட்டு.

"ஆனால் உண்மை" என்றான் தாமஸ். தன் காலுறைகளைக் கழற்றி ஷூவிற்குள் போட்டான். இரண்டு கால்களையும் தனித் தனியாக உதறிக் கொண்டான்.

காக்கிச் சட்டை அழுக்குப் பையன் உயரமான பையுடன் உள்ளே வந்து மேஜையின்மேல் வைத்துவிட்டு, "பாக்கி நாலே கால் ரூபாண்ணே" என்றான் பைக்குள் விரல்களைச் செலுத்திக் கொண்டு.

"நீயே வச்சிக்கோ. போ. என்னைப் பார்க்கணும்னு யார் வந்தாலும், வெளில போயிருக்கேன்னு சொல்லு. கினட்டிக் ஹோண்டாவைச் சுத்தமாத் துடைச்சி வையி" என்றான் சுகுமார்.

தாமஸ் பையிலிருந்து இரண்டு பீர் பாட்டில்களையும் வெளியில் எடுத்து மேஜை முனையில் வைத்துக் கார்க்கைக் கழற்றினான் மெதுவாக. நுரை பொங்க... உள்ளங்கை வைத்து அடைத்துக் கொண்டு சுகுமாரை அடைந்துநீட்டினான்.

"அது எப்படி தாமஸ்?"

"எப்படியோ, ஆனா நடந்திருக்குதே. நான் கொலை செய்யப் போறேன். ஏற்கெனவே கொலை நிகழ்ச்சி முடிஞ்சி வணக்கம் போட்டாச்சி. நான் மிரட்டல் போன் செய்யறேன். எனக்கு முன்னாடியே மிரட்டியாச்சு."

"நீ என்ன நினைக்கிறே?"

"நம்ம முதுகுக்குப் பின்னால் நிறைய காரியங்கள் நடக்குது சுகுமார்."

"யார்?"

"கொலைகாரன்."

"அதான் யார்?"

"அதை நீயும், உன் தங்கையும் தான் சொல்லணும்."

"எங்களுக்கு எப்படித் தெரியும்?"

"உங்களுக்குத்தான் தெரியும்."

"என்ன சொல்றே?"

"நீயும், மாயாவும் சேர்ந்து நாடகம் நடத்தறீங்க."

"சேச்சே."




''நேத்தே முன்னாடி டாக்டர் ரூமிலிருந்து 'ஆ'ன்னு அலறல் சத்தம் கேட்டதே.... ஏன்?''

''டாக்டர் பல் பிடுங்குறார்.''

''இப்பவும் அதே சத்தம் கேட்குதே?''

''இப்போ பீஸ் பிடுங்குறார்.''

— காடிகுளம் ஜெயபாரதிப்ரியா

''நழுவாதே சுகுமார். திட்டம் போட்டது நாம் மூணு பேரும்தான். நம் திட்டத்தின் துல்லியம், துடிப்பு அந்த எக்சுக்கும் தெரிஞ்சிருக்கே... இது எப்படிச் சாத்தியம்?''

''அதான் எனக்குப் புரியலே.''

''புரியாத மாதிரி நடிக்கிறே.''

''தாமஸ், என்ன பேசறே நீ?''

''தமிழ்.''

''என்னப்பா இது என்னையே சந்தேகப்படறே? இப்படி எல்லாம் விளையாட்டுக் காட்ட வேண்டிய அவசியம் என்ன எங்களுக்கு?''

''சொல்லட்டுமா? நாகராஜனைக் கொலை செய்ய என்னைத் தேர்ந்தெடுத்தீங்க. நான் அதுக்குக் கூலியா பெங்களூர் பங்களாவைக் கேட்டேன். சம்மதிச்சீங்க. ஆனால் அப்புறம் யோசிச்சப்போ அது அநியாய சன்மானமாப் பட்டது. அதனால் யோசிச்சீங்க. சரின்னு சொல்லிட்டு மாறினா போலீஸ்ல காட்டிக் கொடுத்துடுவான், அதனால இவனைத் திட்டப்படி செயல்பட வச்சி, இவனையே குழம்ப வைக்கிற மாதிரி வேறே ஒரு நபரை வைச்சி நாகராஜனைத் தீர்த்துடத் திட்டம் போட்டீங்க. செயல்படுத்தினீங்க. சரியா?''

தாமஸ் காலி பாட்டிலை வைத்துவிட்டு நாற்காலியைத் திருப்பிப் போட்டு, முதுகு சாயும் பகுதியில் தன் மார்பைச் சாய்த்து அமர்ந்தான்.

''தாமஸ், உனக்குக் கற்பனை நல்லா வருது. நானே அதிர்ச்சில இருக்கேன். நீ வேறே குழப்பாதே.''

''நான் சொன்னதை மறுக்கறியா?''

''செய்யாத ஒண்ணை ஒப்புக்கச் சொல்றியா? உனக்கு பெங்களூர் பங்களாவைத் தர்றதிலே எங்களுக்கு வருத்தமே இல்லே. இந்த மாபெரும் சொத்தே உழைப்பு இல்லாம, முயற்சி இல்லாம கீழே கிடந்து எடுத்த மாதிரி கிடைக்கிறப்போ, அது ஒரு பொருட்டா?''

''அப்படின்னா நம் எண்ணத்தை, நம் திட்டத்தை அப்படியே கார்பன் எடுத்துச் செயல்படுத்திட்டு வர்ற அந்தப் போட்டி ஆசாமி யாரு?''

''தெரியலையே தாமஸ்.''

தாமஸ் அமைதியாகச் சுகுமாரைப் பார்த்தான்.

''சுகுமார், நீயோ, மாயாவோ இந்த விளையாட்டை விளையாடலையே?''

''சத்தியமா, இல்லேப்பா.''

''சரி, நான் உன்னை நம்புறேன். புறப்படட்டுமா?''

''எங்கே போறே?''

''பம்பாய் போகலாம்னு பார்க்கறேன்.''

''என்னப்பா இது, இங்கே அதை அதை அப்படியே அந்தரத்திலே விட்டுட்டுப் போறேன்னு சொல்றியே...?''

''என்னை என்ன பண்ணச் சொல்றே?''

''தாமஸ், நாகராஜன் செத்ததோட விவகாரம் முடிஞ்சிடலே. அவர் உயில் எழுதிட்டதாலே சொத்து நமக்குத்தான். ஆனா உடனே வராது. போலீஸ் கேஸ் முடியணும். போலீசைப் பொறுத்தவரை சந்தேகம் நம் மேல் இல்லே. இருந்தாலும் அலிபி இருக்கு. கிட்டே வர முடியாது. தலை மறைவா இருக்கிற அசோக்தான் இப்ப நம்ம மகா பெரிய பிரச்னை. அசோக் பெரிய தலைவலி. அவன் வெளில இருக்கிறது நமக்கு ஆபத்து. ஒண்ணு, அவன் போலீஸ் கைல மாட்டித் தண்டனையடையணும். இல்லே, நம்ம கைல மாட்டி உயிரை இழக்கணும். ரெண்டுக்குமே இப்போ அவனோட இருப்பிடம் நமக்குத் தெரிஞ்சாகணும்.''

''நம்மை மாதிரியே அந்த இன்னொரு கும்பலுக்கும் தெரிஞ்சாகணும்.''

''நாம் முந்திக்கலாமே.''

''என்ன செய்யலாம்?''

''நீ சொல்ற தகவல்களின்படி, அந்த வக்கீல் பரத்தோட பாதுகாப்பிலதான் அசோக் இருக்கான்.''

''ஆமாம். ஆனா பரத், மிரட்டல்களுக்கு அப்பாற்பட்டவன்.''

''ஏன் அப்படி?''

''அவனுக்குப் போலீஸ் தொடர்பு இருக்கு. அவங்க ஆதரவு உண்டு.''

''வாசல்ல போலீஸ் பாதுகாப்பா நிக்குது?''

''இல்லே.''

''அதனால....''

''அதனால?''

''அவனை நம்ப கஸ்டடிக்குக் கொண்டு வந்துடு. அசோக் இருக்கிற இடத்தை அவன்கிட்டேர்ந்து வரவழைச்சுடலாம்.''

தாமஸ் சிகரெட் எடுத்துக் கொண்டு, ''அதுதான் வழின்னு நானும் யோசிச்சு வச்சிருந்தேன். ஆனா, இதிலே ஒரு சிக்கல்

இருக்கு சுகுமார்'' என்ருன்.

''என்ன?''

''நம்ம அடையாளங்கள் அவனுக்குத் தெரியறது ஆபத்து. அவன் ஏதாவது குயுக்தியா செஞ்சிட்டா, நம்மை நாமே வெளிச்சம் போட்டுக்கிற மாதிரி ஆயிடும். செய்யாத நாகராஜன் கொலைப் பழி நம்ம மேலேயே திரும்பிடும்.''

''நம்ம அடையாளம் தெரியாம செயல் படலாமே தாமஸ்.''

''சரி, எப்போ? எங்கே?''

''நீயே தீர்மானி. நான் ஏற்பாடு செய்யறேன். உதவியா நிக்கிறேன். நாகராஜனுடை சம்பந்தம் இல்லாத அந்நிய மனிதன் நீதான். ஸோ, நீதான் இதைச் செய்யணும்.''

தாமஸ் விரிவாக அந்த நடவடிக்கை குறித்துப் பேச ஆரம்பித்தான்.

அசோக் கண் விழித்துக் கைக்கடிகாரம் பார்த்தான். மணி ஆறேகால். கண்ணுடி ஜன்னல் வழியாக இருள் உள்ளே வந்து கொண்டிருந்தது. விளக்கைப் போட்டான். உடனே அணைத்தான்.

விளக்குகளை உபயோகப்படுத்தக் கூடாது என்பது பரத் சொன்ன அறிவுரை. பக்கத்து வீடுகளைக் கவரும். பாதி கரைந்த நிலையில் இருந்த சின்ன மெழுகுவர்த்தியைக் கொளுத்தி வைத்தான்.

குளியலறை சென்று தண்ணீரின் ஓசை வெளியே வராமல் முகம் கழுவிக் கொண்டு ஹாலுக்கு வந்தான். ஃப்ரிஜ்ஜைத் திறந்து ஆப்பிள் எடுத்துக்கடித்தான். டெலிவிஷனைப் போட்டுவிட்டு, ஒலியைச் சுத்தமாக நிறுத்தி விட்டு, மௌன நிகழ்ச்சிகளைப் பார்த்தான்.

என்ன வாழ்க்கைடா இது!

சிறை என்று கூடச் சொல்ல முடியாது. சிறையில் இந்தத் திக்திக் இல்லையே... ஒரு சுதந்திரமான கைதியாக இருக்கலாமே... இங்கே இருமலைக் கூட விழுங்கிக் கொண்டு, புத்தகம் படித்து, உறங்கி... எத்தனை நாட்களுக்குத் தொடரப் போகிறது இந்த ரகசிய வாழ்க்கை?

என் எதிரே போன் இருக்கிறது. பிரேமாவின் எண் தெரியும். ஆனல் நான் இதை உபயோகிக்கக் கூடாது. கொடுமை! பாவம், எத்தனை தவித்திருப்பாள். பார்த்து எத்தனை மணி நேரம் ஆயிற்று!

ஒரே ஒரு தடவை போன் செய்து... பிரேமா, நான் சௌக்கியமாக, தலைமறைவாக இருக்கிறேன். பரத் என்னை நிச்சயம் சட்டத்தின் பிடியில் இருந்து காப்பாற்றி விடுவார். அதுவரை பொறுத்திரு. எனக்கு போன் செய்யாதே, என் போனை எதிர்பார்க்காதே... என்று சொல்லிவிட்டால் ஆறுதலடைவாள்.

அசோக் உறுதியான தீர்மானத்துடன் டெலிபோனை அணுகி, ரிசீவரை எடுத்தான். காதில் வைக்க, போன் இறந்திருப்பதை உணர்ந்தான்.

ச்சே! இந்த லாயர் எமகாதகன்! என் தவிப்பை, சஞ்சலத்தை ஊகித்து இணைப்பையே எங்கேயோ தில்லுமுல்லு செய்து துண்டித்திருக்கிருர்.

அசோக் வெறுப்பாக டெலிவிஷனை



அணைத்து விட்டு, படுக்கையில் விழுந்து கதைப் புத்தகம் எடுத்து வலுக்கட்டாயமாகப் படித்தான்.

லூனாவை நிறுத்தி இறங்கினாள் சுசீலா. கையில் பூக்காகிதம் சுற்றிய பார்சல் வைத்திருந்தாள். நடந்து வாசலை அடைந்து, தன்னிடம் இருந்த மற்றொரு சாவியை எடுத்து பரத் வீட்டின் கதவைத் திறந்து உள்ளே வந்தாள்.

விளக்குகளைப் போட்டு வைத்து, கலைந்திருந்த புத்தகங்களை அடுக்கி வைத்து, கட்டிலிலும், நாற்காலி முதுகிலும் கிடந்த அவனது சட்டை, பாண்ட்களை எடுத்து ஹாங்கர்களில் மாட்டினாள்.

டெலிபோன் ஒலிக்க... சென்று எடுத்தாள்.

"ஹலோ, மிஸ்டர் பரத் இருக்காரா?"

"இல்லையே. அவர் இன்னும் ஆபீஸ் லேர்ந்து வரலே. நீங்க யார் சார்?"

"இன்ஸ்பெக்டர் நாதன் பேசறேன்ம்மா. சுசீலா தானே நீ?"

"ஆமாம் சார். ஏதாச்சும் சொல்லணுமா?"

"ஆமாம். நாகராஜன் ரூமிலே கிடந்ததா ஒரு நீலக்கல் கொண்டு வந்து தந்தீங்களே..."

"யெஸ்."

"அதை லாபரட்டரிக்கு அனுப்பியிருந்தேன். ரிப்போர்ட் வந்திருக்கு."

"என்ன ரிப்போர்ட் சார்?"

"உன் கிட்டேயே சொல்லிடட்டுமா? வந்தவுடனே என்னை போன்ல கூப்பிடச் சொல்வேன்."

"பரவாயில்லே. சொல்லுங்க. பொறுப்பா சொல்லிடுவேன்."

"அது சாதாரண கல் இல்லே. சஃபையர்! நவரத்தினங்களிலே ஒண்ணு. கொஞ்சம் காஸ்ட்லியான நீலக்கல். அது ஒரு தங்க ஆபரணத்திலே பதிக்கப்பட்டிருக்கணும்ங்கிறது ரிப்போர்ட்."

"சொல்லிடறேன் சார்."

"முடிஞ்சா என்னை வந்து பார்க்கச் சொல்லும்மா."

"எப்போ?"

"இன்னைக்கே முடிஞ்சாலும்..."

"இன்னைக்கு முடியாது. அவர் ஆபீஸ் கொலீக் கல்யாண ரிசப்ஷனுக்குப் போகணும். நாளைக்குச் சந்திக்கச் சொல்றேன்."

"ரைட். வச்சிடட்டுமா?"

"ஒரு நிமிஷம் சார். தப்பி ஓடினானே, யார் அது?"

"அசோக்."

"அவனைக் கண்டுபிடிச்சிட்டீங்களா?"

"இன்னும் இல்லே. ஒரு லெட்டர் வந்திருக்கு எனக்கு."

"யார்கிட்டேர்ந்து?"

"தகவல் தம்பின்னு கையெழுத்து போட்டிருக்கு."

"என்ன எழுதியிருக்கு?"

"அசோக்குக்கு லாயர் பரத் அடைக்கலம் கொடுத்திருக்கார்ன்னு ஒரே ஒரு வரிதான் இருக்கு. மொட்டைக் கடுதாசியை நாங்க அதிகம் நம்பறதில்லே. அதே சமயம் அலட்சியப்படுத்தறதும் இல்லே. பரத் அப்படி எல்லாம் இல்லீகலா எதுவும் செய்ய மாட்டார்ன்னு எனக்குத் தெரியும். இருந்தாலும் கேக்கணும். அதனாலதான் சந்திக்கணும்னு சொன்னேன்."

"பத்திரிகைக்கு அனுப்ப வேண்டிய ஜோக்கைத் தவறுதலா யாரோ உங்களுக்கு அனுப்பியிருப்பாங்க சார். நான் சொல்றேன். சந்திக்கச் சொல்றேன். வச்சிடட்டுமா?" என்று வைத்துவிட்டுத் திரும்பியவள்... பரத் மீது மோதிக் கொண்டாள்.

"ச்சே! பூனை மாதிரி வந்து நின்னீங்களா? நல்லா மோதிக்கிட்டேன். வலிக்குது" என்று நெஞ்சைத் தடவ... "நான் வேணும்னா உதவி செய்யட்டுமா?" என்றான்.

"இன்ஸ்பெக்டர் நாதன் என்ன சொன்னார் தெரியுமா?"

"தகவல் தம்பிக்கு முன்னாடி பேசினதை மட்டும் சொல்லு."

"அந்தக் கல் காஸ்ட்லியான நீலக்கல். நவரத்தினங்களில் ஒண்ணு. சரி, யார் மொட்டைக் கடுதாசி எழுதியிருப்பாங்க. அந்தப் பிரேமாவாதான் இருக்கணும். அவளுக்குத்தான் நம்ம மேல ஆத்திரம்."

"நோ. அவள் இல்லே."

"எப்படிச் சொல்றீங்க?"

"நம்ம மேல் உள்ள ஆத்திரத்திலே இப்படி போலீசுக்கு எழுதினா... அசோக்கை மாட்ட வைச்சதா ஆயிடுமே. அசோக்கை நாம் சந்திக்க விடலேங்கிற ஆத்திரத்தை விட, அசோக்குக்கு நாம் உதவி செய்யறோம்ங்கிறதிலே பிரேமாவுக்குச் சந்தோஷம்தான்."

"பின்னே யார்?"

"பார்க்கலாம். கையெழுத்தைப் பார்க்கலாம். வெரிகுட்: பரிசைப் பார்சல் பண்ணிக் கொண்டாந்துட்டியா? அஞ்சு நிமிஷத்திலே புறப்பட்டுடறேன். ரிசப்ஷன்லே அரை மணி நேரம் இருந்துட்டு நேரா நாதனைப் போய்ச் சந்திக்கலாம்" என்றவன் பைக்கின் சாவியைக் கைதவற விட்டான்.

சுசீலா குனிந்து எடுத்து, நிமிர்ந்த போது, வாகாகப் பின்புறம் தள்ளி நின்று, விரல்களால் காமிரா அமைத்து, "க்ளிக்" என்றான்.

"ச்சீ, இதுக்குத்தான் சாவியைக் கீழே போட்டீங்களா? ராஸ்கல்."

"நிஜமாவே காமிரா இருந்திருந்தா, டெபானிர் பத்திரிகைக்கு அனுப்ப வேண்டிய அற்புதமான போட்டோ இது" என்றவன் குட்டுப் பட்டான்.

பதினைந்து நிமிடங்களில் அவர்கள் கல்யாண ரிசப்ஷனில் சந்தனம் தொட்டு, ரோஜாப்பூ எடுத்துக் கொண்டு அமர்ந்த கொஞ்ச நேரத்தில் ஒரு பொடியன் ஓடி வந்து பரத்திடம் தந்துவிட்டுப் போன காகிதத்தைப் பிரித்தான்.

'மண்டபத்தின் வாசலுக்குத் தனியாய் வந்தால் ஒரு தகவல் தரப்படும். — தகவல் தம்பி'

— என்று இருந்தது. சுசீலாவிடம் சீட்டைக் கொடுத்துவிட்டு எழுந்தான் பரத்.

(தொடரும்)

# தோட்டா





செப்டம்பரோடு சிதம்பரத்திற்கு லீவ் முடிகிறது. மறுபடியும் அடுத்த வருஷம்தான். மறுபடியும் ஒரு வருஷம் யானை முதுகு போன்று. அவன் கிணற்றிலிருக்கிறபாறைகாத்திருக்க வேண்டும். அவன் பட்டாளத்துக்குப் போன ஒன்பது வருஷமாய் அதுவும் காத்திருக்கிறது.

கிணறு வெட்டும் ஆட்களைத் திரட்டுவது வேறு சிதறிய பாதரசத்தைத் திரட்டுகிற கஷ்டமாகிவிட்டது. சிதம்பரம் பதைத்தான். செப்டம்பரில் பருவ மழை தொடங்கிவிடப் போகிறேன் என்று பயமுறுத்திற்று.

மழை பிடித்துக் கொண்டால் கிணறு வெட்டுக்குக் கை கழுவ வேண்டியதுதான். சேர்த்த ஆட்கள் நாலைந்து நாள் வேலை செய்துவிட்டு இனி வெடி வைத்தால்தான் முடியுமென்று நிர்ச்சிந்தையாக அறிவித்துவிட்டனர்.

அந்த நேரம் பார்த்து ஊரில் கிணற்றுக்கு வெடிக்கத் தோட்டா 'டிமாண்ட்'. அக்கம்பக்கம் எல்லாம் சல்லடை போட்டு அலசிவிட்டான். ஒரு தகவல் கிடைத்ததுதான் மிச்சம்.

'கோபாலபுரத்தில் தோட்டா ஸ்டாக்கிஸ்டு இருக்கிறார். 'பிளாக்'கில்தான் கிடைக்கும். திருட்டுத்தனமாகக் கடத்தப்பட்டு வரும் தோட்டா. ஆகவே தனியே போனால் கிடைக்காது. தெரிந்தவர் மூலம் போக வேண்டும்.

கோபாலபுரம் ஆந்திரா எல்லைக்கு ஐந்து கி.மீ. முன்னே. அருகில் ஒரு சிற்றூரில் — குப்பமோ என்னவோ — சாமிக்கண்ணு லைன்மேனாக இருப்பதாகக் கேள்வி. அவனைப் பிடித்தால் வழி பிறந்து விடுமாம்.

தகவல் சொன்னவர்கள் உபாயமும் தெரிவித்தார்கள். ஒரு மணி நேரத்தில் சிதம்பரம் பஸ் ஏறினான்.



**வையவன்**

# யாரைத்தான் நோவதோ?

கோயமுத்தூர் டாடாபாத்தில் ப்ளாட் வாங்கி வீடு கட்டியிருப்பவர்களுக்கு ஒரு மாபெரும் பிரச்னை, அப்பகுதியிலிருக்கும் ஓர் ஏக்கர் தனியார் நிலத்தில் உள்ள குடிசை வாசிகள்தான்.

எங்களைச் சந்தித்த டாடாபாத் பெண்கள் சங்க உறுப்பினர்கள் அழாத குறைதான்!

"இரவில் தனியாக வர எங்களுக்குப் பயமாக இருக்கிறது. கோயமுத்தூரில் எங்கு திருட்டு நடந்தாலும் போலீஸார் முதலில் சோதனை போடுவது இந்தக் குடிசைவாசிகளைத்தான். சில ஆண்டுகளுக்கு முன்னர் நான்கைந்து தான் இருந்தன. இப்போதோ நூற்றுக்கும் மேற்பட்ட குடிசைகள் முளைத்துவிட்டன. அரசு இவர்களுக்கு வேறு இடத்தில் புறம் போக்கு நிலம் தருவதாகச் சொன்னாலும் போக மறுக்கிறார்கள். இதுவரை கலெக்டரிடம் நூறு மனுக்கள் கொடுத்துவிட்டோம். எங்கள் தொகுதி எம்.எல்.ஏ. ரமணி அவர்களிடமும் எத்தனையோமுறை சொல்லிவிட்டோம். அவரோ, 'நீங்களும் துரதிர்ஷ்டசாலிகள், அவர்களும் துரதிர்ஷ்டசாலிகள்' என்று எங்களுக்கு ஆறுதல் கூறுகிறார்.

"நாங்களெல்லாம் நடுத்தர மக்கள்தான். கடன் வாங்கிக் கஷ்டப்பட்டு வீடு கட்டிக் கொண்டு வந்துள்ளோம். இங்கே என்னடா வென்றால், பட்டப் பகலில் கும்பல் கும்பலாக தெருவில் உட்கார்ந்தபடி கஞ்சா பிடித்துக் கொண்டும், சீட்டு விளையாடிக் கொண்டும் இருக்கிறார்கள். கோயமுத்தூர் கஞ்சா மார்க்கெட்டே இந்தக் குடிசைப் பகுதியில் தான் இருக்கிறது. போலீஸுக்கு நன்கு தெரிந்தும்நடவடிக்கைஎடுக்கமாட்டேனென்கிறார்கள். ஏற்கெனவே பாதாளச் சாக்கடை இல்லாமல் தெருவில் சாக்கடை நீர் ஓடும் நிலை. அதோடு இந்தக் குடிசைவாசிகளும் சேர்ந்து ரோடு ஓரங்களில் அசிங்கப்படுத்துகிறார்கள். இந்தக் குடிசைப் பிரச்னை குறித்து கலெக்டர் ஒரு சர்வ கட்சி கூட்டம் கூடக் கூட்டிப் பேசினார். ஆனாலும் விடிவு காலம் வரவில்லை!"

தொகுதி எம்.எல்.ஏ.வான ரமணி (இ. கம்யூனிஸ்டு) அவர்களைச் சந்தித்து டாடாபாத் பெண்கள் சங்கத்தினருடைய முறையீடுகளைச்சொன்னதும்,கொஞ்சம்உணர்ச்சி வசப்பட்டுப் போனார்.

"உங்களைச் சந்தித்த பெண்களெல்லாம் படித்தவர்கள், விஷயம் தெரிந்தவர்கள். ஓரளவுக்கு வசதியுள்ளவர்கள். அப்படிப் பட்டவர்கள், தங்களைவிடக் கீழான நிலையிலிருப்பவர்களுக்கு என்ன செய்ய வேண்

---

ஊர்த் திருப்பத்தில் பஸ் பாதிரித் தோட்டத்தைக் கடந்தது. சூரிய கிரணம் நுழையும் முன்பே நிழல் கவிந்துவிடும் தோட்டம் அது. அதைப் பார்க்கும்போதெல்லாம் சிதம்பரத்தின் மனசில் ஓர் அலை புரளும். வள்ளி. அப்புறம் பாதிரித் தோட்டத்தின் நீர் வற்றாத கிணறு. சில பொழுதுகள். சில ஏக்கங்கள் ஒரு சவால். ஒரு முடிவு. அலை இப்படிப் புரளும்.

இப்போதும் அதே அலை. பாதிரித் தோட்டம் பின்தங்கிவிட்டது. பஸ் போய்க் கொண்டிருந்தது. அவனும் வள்ளியும் பேசிய பேச்சு இன்னும் அங்கே தேங்கி நிற்கிறது.

"வள்ளி கெடைக்கிறது அத்தினி சுளுவில்லே தொரை!"

"புள்ளி மான் புடிச்சாரணுமா?"

"கல்லும் கரம்புமா மூணு ஏக்கரா, நிலம் வச்சிருக்கிறே. பாதாளக் குகை மாதிரி ஒரு மொட்டைக் கிணறு. இதுலே வீரம் வேறே பேசறே. வள்ளி வாய் வீரத்துக்குக் கெடைச்சுடமாட்டா!"

"என்ன பண்ணணுங்கிறே?"

"இதென்ன தொரை கேள்வி? கெணறு வெச்சிருக்கியே கெணறு. ஒரு களனிக்குத் தண்ணி பாயுமா... தோ பாரு பாதிரித் தோட்டக் கெணத்தை!"

"நான் என்ன பண்ணட்டும்? பாறை வுழுந்து போச்சு."

"இதே மாதிரி வள்ளியைக் கட்டிக்கினு போயி, 'நான் என்ன பண்ணட்டும், மானம் பொய்ச்சுப் போச்சு'ன்னு கையை விரிப்பே."

"இதோ இந்தக் கீழ்வெட்டெல்லாம் வேணும். என்ன வேணும்னு சொல்லு."

நேசிக்கிற பெண்ணிடம் மரியாதை குறைவது ஏற்கும் சக்தியற்றவனுக்கு நரகம். ஒன்பது வருஷத்துக்கு முந்தி ஊருக்குப் பஸ் வந்த புதுசில் சிதம்பரம் இப்படித்தான் பஸ் ஏறினான். பட்டாளத்திற்கு அவன் புறப்பட்டுப் போனபோதும் சரி, விடுமுறைகள் வந்து முடிந்து மீண்டபோதும் சரி, அவன் சென்ற ரயில்கள் கிருஷ்ணா, நர்மதா, கங்கா, பிரம்மபுத்திரா என்று பல நதிகளைக் கடந்திருக்கின்றன. பாலங்களைத்தாண்டியிருக்கின்றன.

பாதிரித் தோட்டத்துக் கிணறும், வள்ளியும் பட்டாளத்து இரவுகளும், அவனது ரைஃபிள் சுட்ட தோட்டாக்களும், அவனது ரயில் ஓடும் பாலங்களின் கீழே நுரை கப்பிச் சீறியோடும் வெள்ளத்தில் அடிபட்டுப் போகும்.

எல்லா ஐயனூர்க்காரனுக்கும் மூளுகின்ற அதே சோகம் அவனை வந்து கவ்வும்.

'என் ஊரை ஏன் இந்த இயற்கை வஞ்சித்தது?'

ஐயனூரில் ஆறு ஓடவில்லை. மூன்று கல்லில் மலையிருந்தாலும் வழியும் மழை வெள்ளம் கிழக்கே பிணங்கித் திரும்பி விடும். ஊர் முழுக்க வானம் பார்த்த விவசாயம். தோண்டிய கிணறுகளில் பெரும்பான்மை, தோட்டாக்களை விழுங்கிவிட்டு லட்சக்கணக்கான வருஷப் பாறைகளின் தவத்தைக் குலைத்து வெளிப்பட்டதோடு சரி.

டும்? சுத்தத்தையும், சுகாதாரத்தையும் சொல்லித் தர வேண்டும். வீதியோரங்களை அசிங்கப்படுத்துகிறார்கள் என்றால், அதைத் தடுக்கக் கழிப்பிட வசதிகள் ஏற்படுத்தித் தர முயற்சி செய்ய வேண்டும். இதையெல்லாம் செய்யாமல் அவர்களைக் காலி செய்யச் சொல்ல இவர்கள் யார்? இவர்களுக்கு அந்தக் குடிசைவாசிகளைப் பிடிக்கவில்லையென்றால் இவர்களைக் காலி செய்து கொண்டு போகச் சொல்லுங்கள்!'' என்று பொரிந்து தள்ளிவிட்டார் ரமணி!



ரமணி எம்.எல்.ஏ.



நம்மிடம் முறையிடும் ... னர்

— கௌசல்யா

ஐயனார் பகீரதர்கள் பாறையைப் பிளந்து பிளந்து பார்த்துவிட்டு பட்டாளத்தில் சேர்ந்து கொண்டிருந்தார்கள். சர்க்கரை வள்ளிக்கிழங்கு மாதிரி மதமதவென்றிருந்த வள்ளியின் வார்த்தைகள் சிதம்பரத்தையும் ஊர் வழக்கத்திற்கு உந்தின.

தோட்டா. பாதாள கங்கையின் மண்டையில் அடித்து வானம் பார்த்த விவசாயத்தைத் தலைமுழுகத் தேவையான தோட்டா. பாதிரித் தோட்டத்துக் கிணறு காட்டுகிற ஆசை பூர்த்தியாக அவசியப்படும் தோட்டா.

சிதம்பரம் சிட்டுக் குருவி மாதிரி பத்திரப்படுத்திய பட்டாளக் காசை வருஷத்திற்கு ஒருதரம் கொண்டு வந்து கிணற்றில் வேட்டு விட்டுக் கொண்டிருந்தான். ஆகாச கங்கைக்கே ஆயிரம் வருஷம் வேண்டியிருந்தது.

மூன்றாம் வருஷம் லீவில் வந்தபோது சிதம்பரத்திற்கு வள்ளிக்குக் கல்யாணம் முடிந்துவிட்ட செய்தி தெரிந்தது. அவன் தன் கொல்லைக் கிணற்றில் கொலுவிருந்த பாறையை வெறித்துப் பார்த்தான். அது வேண்டுமானால் காத்திருக்க முடியும். வள்ளியை எவன் விட்டு வைப்பான்?

கூப்பத்தில் இறங்கியதும் சீக்கிரமாகவே, சாமிக்கண்ணு கிடைத்துவிட்டான். வீட்டு எதிரில் நின்ற சைக்கிளும் அதில் அவனுக்குப் பரிச்சயமான சிமெண்ட் வர்ணமடித்த ஸைட் பாக்ஸும் அது சாமிக்கண்ணுவுடையது என்று நிச்சயப்படுத்தின.

''அடே... சிதம்பரம், எங்கே இவ்வளவு தூரம்?''

''உன்னைத் தேடித்தான் வந்தேன்.''

சாமிக்கண்ணு சைக்கிளைத் தள்ளிக் கொண்டு ஒரு ஹோட்டலுக்கு அவனை அழைத்துச் சென்றான். சம்சாரம் பிரசவத்துக்கு பிறந்தகம் போயிருக்கிறாளாம்.

ஊர் விட்டு ஊரில் நெடுநாள் கழித்துச் சந்திக்கிற மண் பாசத்துக்கு வேரும் விழுதும் நீளம். அதுவும் ஒரே தோப்பில் மாங்காய் அடித்து, ஒரே மரத்தில் கயிற்றில் கட்டப்பட்டிருந்தால் இன்னும் விசேஷம்.

மனசு பழைய கூடுகளுக்குப் பறந்தது. உற்சாகம் ஓய்கிறவரை பேச ஒரு தலைமுறை விஷயம் இருந்தது. வெகு நேரம் கழித்து சாமிக்கண்ணு விவகாரத்துக்கு வந்தான்.

''வந்த விஷயம் என்னடா சிதம்பரம்?''

''தோட்டாவுக்காக வந்தேன்.''

''என்னடா, சிப்பாய் வந்து என்னைத் தோட்டா கேக்கிறே?''

''கெணறு அப்படியே இருக்கு. சாமிக்கண்ணு. கோபாலபுரத்திலே தோட்டாவும் கேப்பும் விக்கிறாங்களாமே.''

''யாரு சொன்னாங்க?''

''ஊர்லே பேசிக்கிட்டாங்க.''

''அங்கே ஒரு ரைஸ் மில்காரன்கிட்டே தோட்டா வருது. வாஸ்தவம்தான். நானும் நாலஞ்சு பேருக்கு வாங்கிக் கொடுத்திருக்கேன். ஆனா....'' என்று இழுத்தான் சாமிக்கண்ணு.

''என்னடா இழுக்கிறே?''

''ஒனக்குத்தோட்டாரொம்ப அவசியமா?''
''என்னடா வெளையாடறியா.... கெணத்து வெட்டை பாதியிலே நிறுத்திட்டு ஓடியாந்திருக்கேன். தோ பொறந்திடுச்சு செப்டம்பரு. காத்து மாதிரி நாளு பறந்துடும். லீவும் முடிஞ்சிடும். மழை ஆரம்பிச்சுட்டா, அவ்வளவுதான்.''
''இல்லே....'' சாமிக்கண்ணு மறுபடியும் இழுத்தான்.
''நீ வர முடியலேன்னு அட்ரஸ் சொல்லி ஒரு சீட்டு குடு.''
''வர்றதுக்கு இல்லேடா. போனு நீ தாங்குவியா?''
''என்ன விஷயம்?''
''அங்கே வள்ளி இருக்கா.''
சிதம்பரத்திற்குப் பொறியில் அடி விழுந்தது. சுதாரித்தான்.
''அவளை கெழக்கே மாங்குப்பத்திலே இல்லே கொடுத்தாங்க.''
''இருக்க விடுவாளா புருஷனை ஒரு எடத்திலே. மேலே போ, மேலே போன்னு முடுக்கிவிட்டு இங்கேவந்திருக்காங்க. அவன் ரைஸ் மில்லே மேற்பார்வை பண்றான். கூட மாட விவசாயம் தோட்டா வாங்குறது விக்கிறது இவ்தான். இப்ப நாம்ப போனாலும் அவ கையிலேதான் தோட்டா வாங்கணும்.''
சிதம்பரம் உள்ளுக்குள் சிர்த்தான். கசந்த சிரிப்பு. அவள் தூண்டி, தோட்டாவுக்குப் பணம் சேர்க்கப் பட்டாளம் போய், இப்போது அவள் கையில்தான் தோட்டா வாங்க வேண்டும்.
''என்ன சிதம்பரம், ஊருக்குத் திரும்பிடலாம்னு தோணுதா?''
''யோசிக்கிறேன்.''
சிதம்பரத்தின் யோசனைகளில் அவன் போகும் ரயில்களின் பாலத்துக்குக் கீழே ஓடும் நதிகளின் வெள்ளம்தான் முக்குளித்துப் பாய்ந்தது. இப்போதுவிட்டால் அடுத்த வருஷம்.
''சைக்கிள் போவுமா?''
''ஓ.''
''நீ மிதிக்கறியா.... நான் மிதிக்கவா?''
''நீ உட்கார்டா சிதம்பரம்.''

கால் மணி நேரத்தில் கோபாலபுரம் ரைஸ் மில். வள்ளி, சற்றுப் பருத்து நிழலிலேயே இருப்பதால், சிவந்து விட்டிருந்தாள். கைகளிலும் கழுத்திலும் தங்கம்.
கணவன் டவுனுக்குப் போயிருந்தான். அவனைப் பார்த்துக் கொஞ்சமாவது துணுக்குறுவாள் என்று எதிர்பார்த்தான் சிதம்பரம்.
அவள் மிஷினில் நெல் அரைக்க வந்தவனைப் பார்ப்பதுபோல் சகஜமாகப் பார்த்தாள். சிதம்பரத்தைத் தவிர்த்துவிட்டு சாமிக்கண்ணுவிடம் பேச்சுக் கொடுத்தாள்.
''என்ன சாமிண்ணே! ரொம்ப நாளா ஆளைக் காணோம்.''
சாமிக்கண்ணுவுக்கு அவள் நெஞ்சழுத்தம் தெரியும்.
''வேலே. இன்னொரு லைன்மேன் லீவு போட்டுட்டான். அவன் ஏரியாவும் தலைமேலே விழுந்து போச்சு.''
''பொஞ்சாதிக்குப் பிரசவம் ஆயிடுச்சா?''
''போனவாரம்தான் தாய் வூட்டுக்குப் போயிருக்கு. ஆகற நாளுதான்.''
''என்ன விசேஷம்?''
''சிதம்பரம் வந்திருக்காப்லே.''
''தெரியுதே.''
''அவனுக்குக் கெணத்திலே வெடிக்கத் தோட்டா வேணுமாம்.''
சிதம்பரத்தின் பார்வையும் வள்ளியின் பார்வையும் மோதிக் கொண்டன.
''சரக்கு ரொம்ப டிமாண்ட்! டஜன் நூத்தி ருபது ரூபா ஆவுமே.''
''பணத்தைப் பத்திக் கவலே இல்லே'' என்றான் சிதம்பரம். அவன் தொண்டை கரகரத்தது.
''பேசிக்கிட்டிருங்க! எனக்கு வயிறு சரியில்லே. அப்படி வரப்புக்கா போய்ட்டு வந்துடறேன்'' என்று சமயமறிந்து நழுவினான் சாமிக்கண்ணு.
''இரு அண்ணே....'' என்று அவள் குரல் கொடுத்தது காதில் விழாததுபோல் நெடுநெடுவென்று நடந்தான் அவன்.
வள்ளி திரும்பி சிதம்பரத்தைப் பார்த்து முறைத்தாள்.
''நெஜம்மா தோட்டாவுக்குத்தான் வந்தியா?'' என்று கேட்டாள்.
''பின்னே நீ பண்ணின துரோகத்துக்கு நியாயம் கேக்க வந்தேன்னு நெனச்சியா?''
வள்ளியின் கை அவள் இடுப்பில் ஏறியது.
''துரோகமா? இன்னு தொரை பெணுத்தறே.''
''இல்லே. நம்பிக்கை மோசடின்னு வச்சுக்க.''
''ச்சொச்சொச்சோ.... இன்னென்னமோ பேசறியே!''
''கெணறு வெட்டக் காசு இல்லேன்னேன். நீ என்னைப் பட்டாளத்துக்குப் போவச் சொல்லலே.''
''சொன்னேன்.''
''வள்ளி அத்தினி சுளுவிலே கெடைக்க மாட்டான்னு சொல்லலே?''
''சொன்னேன்.''
''நான் போன ரெண்டு வருசத்திலே எவனுக்கோ கழுத்தை நீட்டிட்டியே!''
''கெணத்தை வெட்டினியா?''
சிதம்பரத்திற்கு வாயடைத்துப் போயிற்று.
''நான் ஒனக்குக் காலமெல்லாம் காத்திருக்கேன்னு கையடிச்சுக் குடுத்தனா?''
பேசத் தெரியாமல் உளறிவிட்டோம் என்று நினைத்தான் சிதம்பரம். வள்ளி இரண்டு மூன்று முறை அவனை விட்டு விட்டுப் பார்த்தாள். சிதம்பரம் முழுக்க முறியடிக்கப்பட்டு நொறுங்கி விழுந்தான்.
''ஒண்ணை நெனச்சுப் பாத்தியா?'' என்று வள்ளி கேட்டாள்.
''என்னது?''
''பாறை எவ்வளவு போயிருக்கு?''
''பாதி போயிருக்கு.''

''ஒம்பது வருஷமாவா வெட்டிகிட்டிருக்கே?''

''ஆமா. இந்தத் தபா தண்ணி விழுந்திடும்.''

''இந்த வள்ளி அந்தச் சொல்லு சொல்லலேன்னு ஐயனாரை விட்டு நீ கௌம்பியிருப்பியா. அந்தப் பாறை மாண்டிருக்குமா?''

சிதம்பரம் பேசவில்லே.

''நான்தான் கல்யாணம் கட்டிக்கிட்டு வந்துட்டேனே... அப்புறம் நீ யாருக்காகக் கெணத்தை வெட்டறே?''

''நீ போயிட்டா என் வாழ்க்கை அதோட...'' என்று ஆரம்பித்த சிதம்பரம் முடிக்காமல் நிறுத்திவிட்டான்.

''அப்படித்தானே எனக்கும் இருக்கும்! அதுவும் நான் பொம்பளே...'' ஏன் நிக்கறே பெஞ்சியிலே உட்காரு. டேய்ய்ய்ய் முனிசாமி.... காப்பிக் கடைக்குப் போய் ஒரு காப்பி வாங்கியா.''

''வேணும். நான் காப்பி குடிக்க வரலே.''

''சும்மா உக்காரு தொரை!''

சிதம்பரம் உட்கார்ந்துவிட்டான்.

''தோ லீவிலே வந்திருக்கே! வேலே முடியணும்னு துடிக்கறே. லீவு காத்திருக்குமா?''

என்ன கிராதக நெஞ்சோடு பேசுகிறாள் என்று சிதம்பரம் குமைந்தான்.

''என்னடா இவ இப்படிப் பேசறானே... வெட்டிடலாமான்னு வெறி வருதா?''

''இல்லே.''

''அதானே உண்மை.''

எல்லா ஐயனூர்க்காரனுக்கும் தெரிவது போல் அதுதான் உண்மையாகப் பட்டது. எத்தனையோ வள்ளிகள் அந்த மலேச் சாரல் ஊரின் தண்ணீர் ஏக்கத்திற்காக எத்தனையோ சிதம்பரங்களைப் பட்டாளத்திற்குத் துரத்தியதாக அவனுக்குத் தோன்றிற்று.

''காப்பியை வாங்கிக்கோ. இதான் என்னாலே குடுக்க முடிஞ்சுது.''

''தோட்டா?''

''பணம் கொண்டு வந்திருக்கியா?''

''ஓ.''

அட்டைப் பெட்டியில் தோட்டாக்களை அடுக்கி அழகாக சரடு போட்டுக் கட்டிக் கொடுத்தாள் வள்ளி. உபாதை நீக்கிக் கொண்டு சாமிக்கண்ணு வந்தான். அவன் தான் விடைபெற்றான்.

''வரட்டுமா வள்ளி? ஊட்டுக்காரு வந்தா வந்துட்டுப் போனேன்னு சொல்லு.''

''சொல்றேன். நீ வந்துட்டுப் போசாமிஞ்ணே! சொந்த ஊர்க்காரு... எட்டிப் பார்த்துக்கிட்டாத்தானே எனக்கும் தெம்பு வரும்.''

''வர்றேன்.... வர்றேன்.''

மனசில் சிதம்பரம் வளர்த்திருந்த ஒரு பாறை சுக்கல் சுக்கலாக நொறுங்கி லேசாகிற்று.

வள்ளி கையால் வாங்கி வந்த தோட்டாவுக்கும் நல்ல பலன். லீவு முடிவதற்கு முன்பே சிதம்பரத்தின் கிணற்றில் ஊற்று பீய்த்துக் கொண்டு கிளம்பிவிட்டது.

★★★

## வாசகர் கருத்து




தீபாவளி மலர்ப் பயணத்தை மேற்கொண்ட என் வாசக மனம் 'சிவக் கொழுந்தை'க் கண்டு குதூகலித்தது. க.நா.சு.வின் கட்டுரை வாசகர்களின் சிந்தனையைக் கிளறிவிடும் மருந்தாக அமைந்தது.

— ஆர். கோபாலன், ஸ்ரீரங்கம்.

இலக்கியத் தரமும், ஆன்மிக மணமும் கமழ, கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்து படைத்த பல்சுவைக் கட்டுரைகள், கதைகள், கவிதைகள் உள்ளத்தை மகிழச் செய்தன.

— ஏ.ஜி. அசோக்ராஜா, சென்னை — 4.

பருவங்களைப் பற்றியும், மாதங்களைப் பற்றியும் ஜெயரதனின் ரம்யமான கருத்துக்களும், எளிய நடையும், அழகிய மேற்கோள்களும் மிகச் சிறப்பாக இருந்தன. பல மலர்களைக் கொண்டு தொடுக்கப்பட்ட கல்கி (தீபாவளி மலர்) மாலையில் திரு ஜெயரதனது படைப்பு சரத்ருதுவில் மலர்ந்த அழகிய, வாசமுள்ள மலராக மணக்கிறது.

— ஹேமா ராஜன், சென்னை — 33.

கல்கி தீபாவளி மலர் எப்போதுமே பிரும்மாண்டமாக அமைந்து அசர வைக்கும் என்பது தெரிந்த விஷயம்தான்! ஆனாலும் மலரைப் பார்க்கும்போது வியக்காமல் இருக்க முடியவில்லை! ஏராளமான பக்கங்கள்! ஒவ்வொரு பக்கமும் கலையழகுடன், அற்புதமாக இருக்கிறது. சிறுகதைகள், கட்டுரைகள், கவிதைகள், நகைச்சுவைத் துணுக்குகள், வண்ண வண்ணச் சித்திரங்கள், புகைப்படங்கள் 'என்று எல்லாமே மனத்தைக் கவரும் வண்ணம் தனிச் சிறப்புடன் திகழ்கின்றன. 'இந்தியாவின் ஆன்மா இங்கே இருக்கிறது' என்று கிராமங்களின் அழகை வண்ணப் படங்களாகத் தந்திருந்தவிதமும், 'வேற்றுமையில் ஒற்றுமை' என்று வண்ணத்தில் மனத்தைக் கொள்ளை கொண்ட விதமும் இந்த வருட கல்கி மலருக்குத் தனிச் சிறப்பு.

— ஆர். அமுதா, வடுகவிருட்சியூர்.

# ரசிகர்களும், மன்றங்களும்!

**வாசகர் பட்டி மன்றம் — 8**

**வாசகர் தீர்ப்பு:**

| | |
|---|---|
| ரசிகர் மன்றங்களால் தொல்லையே | 83% |
| ரசிகர் மன்றங்கள் தேவையே | 17% |







## ரசிகர் மன்றங்களால் தொல்லையே! முதல் பரிசு வாதம்

ரசிகர் மன்றங்கள் — கவர்ச்சிகரமான குப்பைத் தொட்டிகள்; வேலை வெட்டி இல்லாதவர்கள் கூடும் சத்திரங்கள்.

யாரோ ஒரு நடிகர் நடித்துப் புகழும், பணமும் சம்பாதிப்பதற்கு இந்த அப்பாவி ரசிகர்கள் ஏன் அடித்துக் கொண்டு சாக வேண்டும்? நன்றாகச் சிந்தித்துப் பார்த்தால், நடிகர்களால் இந்தச் சமுதாயத்திற்கு எந்த ஒரு முன்னேற்றமும் கிடையாது. ரசிகர் மன்றங்களால் ஏற்படும் தொல்லைகள் பல.

1. இளைஞர்களிடையே பகை உணர்வும், கோஷ்டிப் பூசலும் வளருகின்றன.

2. இளைஞர்களின் சக்தியும், ஆற்றலும் வீணடிக்கப்படுகின்றன.

3. சம்பந்தப்பட்ட நடிகர்களின் பாதிப்பு இளைஞர்களிடம் படிந்து விடுகிறது. தொடர்ந்து அதே பாணியில் பெண்களைக் கண்டால் கேலியும், கிண்டலும் செய்யத் தூண்டுகிறது.

4. நன்கொடை என்ற பெயரில் கட்டாய வசூல் கொள்ளை நடைபெறுகிறது.

5. பல இளைஞர்கள் சில தவறான வழிகளில் கெட்டுப் போவதற்கு இந்த ரசிகர் மன்றங்களே காரணமாக இருக்கின்றன.

6. தியேட்டரில் பொது மக்கள் அமைதியாகப் படம் பார்க்க முடிவதில்லை. பல இடங்களில் கத்திக் குத்து, சோடாபாட்டில் வீச்சு போன்றவற்றுக்கு ரசிகர் மன்றங்களும் காரணமாக இருக்கின்றன.

7. கலை உணர்வு என்ற போர்வையில் இளைஞர்களிடையே வெறித்தனம் வளருகின்றது.

8. இளைஞர்களின் 'பர்ஸ்' காலியாக்கப்படுகிறது.

9. பாடுபட்டு வளர்த்த பெற்றோர்களின் சொல்லை அந்த இளைஞர்கள் கேட்பதில்லை. மாறாக அந்த நடிகர் ஏதேனும் சொன்னால் உடனே செய்யத் துடிப்பார்கள். ஆகவே ரசிகர் மன்றங்களால் தொல்லையே.

— டி. கிருஷ்ணமூர்த்தி, சென்னை — 23.

ஒரு திரைப்படம் என்பது பல நடிகர்கள், நடிகைகளைக் கொண்டு உருவாக்கப்படுவதாகும். மேலும் காமிரா, ஒலி அமைப்பு, வண்ணம், இசை முதலியவை ஒரு திரைப்படம் வெற்றியடைய முக்கியப் பங்கு வகிக்கின்றன. இந்த நிலையில் ஒரு தனிப்பட்ட நடிகனுக்கோ, நடிகைக்கோ ரசிகர் மன்றம் இருந்து வருவது கலையை ஒட்டு மொத்தமாக ரசிக்கத் தெரியாத ஓர் அவல நிலையைக் காட்டுகின்றது. இதர கலைஞர்களை அவமானப்படுத்துவதாகும்.

— டி. சுந்தரராமன், சென்னை — 83.

புதிய திரைப்படங்கள் வெளியாகும்

போது, தியேட்டரிலிருந்து விற்பனையாகும் டிக்கெட்டை வாங்கி, மன்றம் என்று சொல்லிக் கொண்டு அதிக லாபம் போட்டு, திரைக்காட்சி நுகர்வோர் தலையில் கட்டுகின்றனர். மேலும் திரையரங்குகளில் அம் மன்றத்தின் தலைவர், பொருளாளர், செயலாளர் சம்பந்தப்பட்ட புகைப்படங்களைத் தங்கள் அபிமான நடிகர் புகைப்படத்தோடு இணைத்துப் பொது மக்கள் பார்வைக்கு வைத்து அகமகிழ்கின்றனர். இது ஒரு வக்கிரமான விளம்பரப் பித்து.

— ஆர். கே. லிங்கேசர், மேலகிருஷ்ணன் புதூர்.

கேடு விளைந்து கொண்டிருப்பதும் நம் நாட்டில்தான்.

— கா. கலைச்செல்வன், பொள்ளாச்சி—1.

ரசிகர் மன்றங்களின் விளம்பரங்கள், பிரசாரங்கள் ஆகியவற்றால்தான் 'படம் வெற்றி பெற்று 'ஓகோ' என ஓடுகிறது என்பதெல்லாம் சரியானதல்ல. ஒரு படத்தின் வெற்றிக்கு இவர்கள்தான் காரணம் என்றால், இரசிகர் மன்றத்தினரால் 'பால் குடம்' கட்அவுட்களுக்குப் 'பாலாபிஷேகம்' தெருவெங்கும் 'அலங்காரப் பந்தல்கள்' என்று அமர்க்களப்படுத்திய பல படங்கள் வந்த வேகத்தில் பெட்டிக்குள் சென்று 'மீளாத் துயிலில்' ஆழ்ந்ததெப்படி?

— எம். பாலு, அம்பாசமுத்திரம் — 1.





நற்பணிகள் செய்கிறோம் என்று ரத்த தானம் செய்யும்பொழுதே, மற்றொரு இடத்தில் இரண்டு ரசிகர் மன்றங்கள் மோதிக் கொண்டு, கத்தியால் குத்திக் கொண்டு, ரத்தத்தைத் தானம் செய்யும் நிகழ்ச்சிகளைச் செய்தித் தாள்களில் அடிக்கடி பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். நடிகர்களின் படம் வெளிவரும் நாளில் தியேட்டரில் நடிகரின் கட்—அவுட்டுக்குக் குடம் குடமாகப் பாலாபிஷேகம் செய்யும் அளவுக்கு மூட நம்பிக்கை கொண்ட ரசிகப் பெருமக்களை நாம் வேறு எந்த நாட்டில் காண முடியும்? முதல் காட்சி ''ரசிகர் காட்சி'' என்று சொல்லி அதன் மூலம் கொள்ளை அடிப்பது மட்டுமல்லாமல், அதிக ஆர்வத்தில் திரையரங்கங்களிலுள்ள விலையுயர்ந்த இருக்கைகளைக் கிழித்துச் சேதமாக்குகிறார்கள்.

— அ. கலைமணி, திருச்சி — 1.

நண்டு, நத்தை திரைப்படத்தில் நடிக்க வந்தால் கூட அதற்கு ஒரு ரசிகர் மன்றம் என்ற அவலநிலை நம் நாட்டில்தான். அமைதியாகத் தியேட்டரில் படம் பார்ப்பவர்களின் மத்தியில் ரசிகர் மன்றம் என்ற கவசம் அளித்த துணிவில், கைதட்டி ஆரவாரம் எழுப்பி அமைதியைக் குலைத்து, அநாகரிகமாக நடந்து கொள்பவர்கள் இருப்பதும் நம் நாட்டில்தான். இந்நாட்டின் பிரஜை என்று சொல்லிக் கொள்வதை விடக் குறிப்பிட்ட நடிகரின் ரசிகன் என்று கூறிக் கொள்வதை மிகப் பெருமையாக நினைக்கும் ரசிகர்களால்

## ரசிகர் மன்றங்கள் தேவையே!
## முதல் பரிசு வாதம்

எந்த ஒரு கலைஞருக்கும் ஊக்குவிப்பும் பாராட்டும் ரொம்ப அவசியமாகும். இத்தகைய பாராட்டு அவர்களது திறமையை வளர்த்துக் கொள்ள உதவும். அதைப்போல் குறைகளை நேரடியாக எடுத்துச் சொன்னால், திருத்திக் கொண்டு, சிறப்பாகச் செயல்பட வாய்ப்பு ஏற்படும். இவற்றைச் செய்ய ரசிகர் மன்றங்கள் தேவையே!

2. ரசிகர் மன்றங்கள் மூலம் பல சமூக சேவைகள் செய்யலாமே! சில ரசிகர் மன்றங்கள் இப்போதும் இதைச் செய்துதான் வருகின்றன. (உ—ம்) ரத்ததானம், கண் தானம், சேரிகளைச் சுத்தம் செய்தல், தியேட்டர்களில் மக்களை ஒழுங்குபடுத்தி, டிக்கெட் கொடுத்து, குழப்பத்தைத் தவிர்த்தல்.

3. ரசிகர் மன்றங்கள் அரசியலில் நுழைந்து, ஆட்சியைப் பிடித்து, மக்களுக்கு நன்மை செய்யலாமே!

4. லட்ச லட்சமாகச் சம்பாதிக்கும் நடிகர்கள் அதில் ஒரு சிறு பகுதியை ரசிகர் மன்றங்களுக்குக் கொடுக்கிறார்கள். இப்பணத்தால் வேலை கிடைக்காத பலருக்கு, ஏதோ ஒரு வேலை கிடைக்கிறதே. இந்த வேலையும் கிடைக்காவிட்டால், இந்த இளைஞர்கள் மனமுடைந்து சமூகவிரோதிகளாகமாறிவிட வாய்ப்பிருக்கிறதே!

5. ரசிகர் மன்றங்கள் (விழாக்களுக்காக) செலவழிக்கும் பணத்தில் பெரும் பகுதியை அந்த நடிகரேதான் கொடுத்து விடுகிறார். வேறு யாருக்கும் நஷ்டமில்லை. இச்சூழ்நிலையில், ரசிகர் மன்றங்களால், பூக்கடைக்காரர், மாலை கட்டுபவர், பேனர் எழுதுபவர் என்று பலருக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கிறது.

6. படம் பார்க்க வரும் மக்களை வரவேற்று, பூக்கள், இனிப்புகள் ஆகியவற்றை வழங்கும்போது, மக்கள் பெருமகிழ்ச்சியும், உற்சாகமும் அடைகிறார்கள். இதனால் பார்க்க வந்த படம் நன்றாக இல்லையென்றால் கூட, இந்த மகிழ்ச்சியுடனாவது வீடு திரும்புகிறார்கள். இந்த நாட்டு மக்களுக்கு மகிழ்ச்சிப் பற்றாக்குறை பெரிய குறையாகத் தானே உள்ளது? அந்தப் பற்றாக்குறையைத் தீர்க்க முடிகிறதே.

7. பல இடங்களில் தியேட்டர் உரிமையாளர்கள் தியேட்டரைச் சரியாகப் பராமரிப்பதில்லை. குடிநீர் வசதி செய்வதில்லை. குளிர் சாதன மிஷினை ஓட்டுவதில்லை. டிக்கெட்டுகளை பிளாக்கில் மொத்தமாக விற்று விடுகிறார்கள்.,

இச்சூழ்நிலைகளில் பல நகரங்களில் ரசிகர் மன்றத்தினர் தலையிட்டு, உரிய அதிகாரிகளிடம் முறையிட்டு, தியேட்டர்களை ஒழுங்கு படுத்துகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

8. ரசிகர் மன்றங்கள், நடிக நடிகையருக்கும் பொது மக்களுக்கும் இடையே ஒரு பாலமாக இருந்து உதவுகின்றன. நடிகர்களைப் பற்றிய பொதுமக்களின் அபிப்பிராயங்களை இவர்கள் நடிகர்களுக்கு எடுத்துச் செல்லும் தூதுவர்களாகப் பணிபுரிகிறார்கள்.

எனவே ரசிகர் மன்றங்கள் தேவை; தேவை; தேவையே!

— எஸ். ராஜேந்திரன், மன்னார்குடி — 1.

கட்சி அடிப்படையில், மக்களின் குறைகளைப் போக்க முயற்சி செய்யும் போது ஏற்படும் தகராறுகள், பாகுபாடுகள் காரணமாக மக்களின் குறைகளைப் போக்க நடவடிக்கை எடுக்கப் பயப்படும், அல்லது தாமதிக்கும் அதிகாரிகள் கூட மன்றத்தினரின் குரலுக்குச் செவி கொடுத்து விரைவாகக் காரியம் செய்து தருகிறார்கள். ஆகையால் நல்ல காரியங்கள் பலவற்றை நடத்தித் தர ரசிகர் மன்றங்கள் தேவையே!

— எஸ். முகம்மது யூசுப், திருப்பூர் — 4.

உலகில் எங்கும் இல்லாத அளவில், தமிழ் நாட்டில் ரசிகர் மன்றங்கள் நடிகர்களை ஊக்குவித்துப் பாராட்டி வருகின்றன. ரசிகர் மன்றங்கள் இல்லையானால் அரசியல் கட்சியே இல்லையென்பதற்குச் சிறந்த எடுத்துக் காட்டு எம். ஜி. ஆர். ரசிகர் மன்றம் அமைத்த அ.இ. அ. தி. மு. க.! அதுமட்டுமா? உடல்நலம் சற்றுக் குறைந்த எம். ஜி. ஆர். அவர்களுக்கு 'டானிக்' காகவல்லவா அமைந்தது எம்.ஜி. ஆர். ரசிகர் மன்றம். சமீபத்தில் நடத்திக் காட்டிய மதுரை மாநாடு!

— மீ. பாகீரதி, வேலூர் — 6.

ஒரு குறிப்பிட்ட நடிகரைப் போற்றும் ஒரு சாரார், வேறு ஒரு நடிகரைப் போற்றும் மற்றொரு மன்றத்தாருடன் சண்டை, சச்சரவு, கலகங்களில் ஈடுபடுவது தவிர்க்கப்பட வேண்டியது. ரசிகர் மன்றங்கள் "ரசிக"த் தன்மையை மட்டும் கைக்கொண்டால் மன்றங்கள் தேவையே!

— பி. ராஜகோபால், சென்னை — 41.

ஒரு நல்ல கலைஞனை உருவாக்கவும், உருவாக்கிய கலைஞனை நல்வழிப் பாதையில் நிலைநிறுத்தவும், அவ்வாறு நிலைநிறுத்திய கலைஞனுக்குப் பெருத்த புகழைச் சேர்க்கவும் "ரசிகர் நற்பணி மன்றங்கள்" அவசியம் தேவையே!

, — கொ. இரமேஷ், சிங்காரப்பேட்டை.

தற்போது பொள்ளாச்சியில் கமலஹாசன் ரசிகர் மன்றத்தினர் ஒரு மருத்துவமனையே கட்டிக் கொண்டு வருகிறார்கள். இப்படி எத்தனையோ நற்பணிகளைப் பட்டியலிடலாம். இவர்கள் எல்லோரும் பெரிய பணக்காரர்கள் அல்ல. பல பேர் சராசரி வருமானம் உடையவர்களே. ரசிகர் மன்றங்களின் மூலம் எல்லோரும் ஒருங்கிணைந்து ஒரு நல்ல செயலில் ஈடுபட முடிகிறது. இவை மூலம் மக்களின் ஒற்றுமை உணர்ச்சி வளர்கிறது. ஒரு குடையின் கீழ் ஒரு நோக்கிற்காக உழைக்கும் மன உறுதி பலப்படுத்தப்படுகிறது. நன்மை பயக்கும் ரசிகர் மன்றங்கள் தேவையே! தேவையே! தேவையே!

— ஆர். ராஜேஷ், திருப்பூர் — 1.



"ஏதாவது செய்திகளைத் தெரிவிக்க வேணும்னு கார்டிலே எழுதினால் போதும் என்கிறீர்களே... ஏன்?"

"இன்லெண்ட் லெட்டரிலோ இல்லை கவரிலோ எழுதினால் அதைப் பிரித்துப் பார்க்கச் சோம்பல் பட்டு அப்படியே வச்சுடுவேன். அதான்!"

— சரஸ்வதி பஞ்சு

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — III
ராஜ்மோகன் காந்தி

9



# மவுண்ட்பாட்டன் திட்டம்

ஆகஸ்டு பதினைந்தாம் தேதி, இந்தியா, பிரிட்டனின் மேலாதிக்கத்துடன் கூடிய சுதந்திரம் பெறும். பஞ்சாபும், வங்கமும் பிளவுபடும். வடமேற்கு எல்லைப்புற மாகாணம் இந்தியாவுடன் சேருமா அல்லது பாகிஸ்தானுடன் இணையுமா என்பதை வாக்கெடுப்பு நிர்ணயிக்கும். அஸ்ஸாமில் முஸ்லிம் பெரும்பான்மையுள்ள ஸைல்ஹெட் ஜில்லாவிலும் இதேபோன்ற வாக்கெடுப்பு நடக்கும். சுதேச சமஸ்தானங்கள் இந்தியாவுடன் இணையலாம் அல்லது சுதந்திரமாக இருக்கலாம். சுதேச சமஸ்தானங்கள் மீது பிரிட்டனுக்கிருந்த ஆளுமை முடிவு பெறும்.

— மவுண்ட்பாட்டனின் இந்தத் திட்டத்துக்கு நேருவும் பட்டேலும் இசைவு தந்தார்கள். மவுண்ட்பாட்டன் திட்டத்தை ஆராய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடிய போது மகாத்மாவும் அதனை ஏற்குமாறு கேட்டுக் கொண்டார். ஆனால் தம்முடைய ஏமாற்றத்தை அவரால் ஒளிக்க முடியவில்லை. "என்னுடைய கருத்து என்ன என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்த விஷயமே. ஆனால் காங்கிரஸ் காரியக் கமிட்டி பிரிட்டனிடமும் லீகினிடமும் திட்டத்துக்கு ஒப்புதல் அளித்துவிட்டது. இந்தத் திட்டத்தை எதிர்ப்பவர்கள் மாற்றுத் திட்டம் வைத்திருக்கிறார்களா? அதனை நிறைவேற்ற மாற்றுத் தலைவர்கள் இருக்கிறார்களா? இல்லை! உங்கள் சார்பில் தலைவர்கள் கையெழுத்துப் போட்டு விட்டார்கள். இப்போது நீங்கள் அந்தத் தலைவர்களைக் கைவிட்டு விடலாம். ஆனால் அப்படிச் செய்வதற்கு முன்னால், இதற்கு மாற்றுத் திட்டமாக், புரட்சிகரமான ஒரு காரியத்தை, வெற்றிகரமாக உங்களால் நிறைவேற்ற முடியுமா என்று யோசிக்க வேண்டும். உங்களால் முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை" என்றார் அவர்.

பட்டேல் யதார்த்தமாகப் பேசினார்: "புரையோடிப் போன ஒரு கரத்தை இழக்க நேர்ந்தாலும் இத்திட்டம் எண்பது சதம் இந்தியாவை நமக்குத் தரும்" என்றார். நேருவோ, "இணைந்திருக்க விரும்பாத பகுதிகளை வலுக்கட்டாயமாகச் சேர்த்து வைப்பதால் ஒன்றையுமே திட்டமிட முடியாமல் போகும்" என்று சுட்டிக் காட்டினார்.

மவுண்ட்பாட்டன் திட்டத்துக்கு ஆதரவாக 157 வோட்டுக்களும், அதனை எதிர்த்து 29 வோட்டுக்களும் போடப்பட்டன. 32 பேர் நடுநிலை வகித்தனர். பட்டேல் போலவே வி. ஆரும் திட்டத்தை முழுமனத்துடன் வரவேற்றார்:

"மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் ஜின்னாவிடம் இதே திட்டத்தை நாம் சமர்ப்பித்தோம். அப்போது காந்தி, ஜின்னாவுக்குத் தர முன்வராத எதையும் இப்போது நாம் அளித்துவிடவில்லை. இப்போது மட்டும் ஜின்னா ஒப்புக்கொள்வானேன் என்று சிலர் கேட்கிறார்கள். ஜின்னா எப்போதுமே நியாய உணர்வுடன் நடந்து கொள்ள மாட்டார் என்று நாம் ஏன் நினைக்க வேண்டும்? இம்மாதிரியான அலசல்கள் பயனற்றவை. விட்டுவிடுவோம். நமது நல்லதிர்ஷ்டத்தோடு இணைந்து முன்னேறுவோம். நாற்பது கோடி மக்களுக்கு, ஒரு ஜனநாயக அரசு வழங்கப்படுவதென்பது உலகில் வேறு எங்கும் நடந்ததில்லை."

ஆனால் ராஜாஜி திட்டம்தான் மவுண்ட்பாட்டன் திட்டம் என்று பெயர் மாற்றம் பெற்றதா? இரு திட்டங்களுமே ஒரேமாதிரியான நிலப்பகுதிகளைத்தான் பாகிஸ்தானுக்கு வழங்கின. ஆனால் வைஸ்ராய் திட்டம் இரு தேசங்களுக்கிடையில் எந்தவிதமான பிணைப்பையும் ஏற்படுத்தவில்லை. இந்த முக்கியமான வித்தியாசத்தை மறந்து, "இப்படிச் சிறுத்துப் போன பாகிஸ்தானை ஒப்புக்கொள்வதுதான் ஜின்னாவின் நோக்கம் என்றால், அன்றைக்கே அவர் ராஜாஜி திட்டத்தை ஏற்றிருக்கலாமே" என்று அதிருப்தியுற்ற சில முஸ்லிம்கள் கேட்டனர்.

ஜின்னா இறக்க வேண்டிய சீட்டு ஒன்று பாக்கி வைத்திருந்தார்! 'மேற்கு பாகிஸ்தானையும் கிழக்குப் பாகிஸ்தானையும் இணைக்கும் ஒரு நிலப்பகுதி பாகிஸ்தானுக்குத் தரப்படவேண்டும்' என்றார்! காங்கிரஸுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. நல்லவேளை, மவுண்ட்பாட்டன் உறுதியாக இருந்து, ஜின்னா அந்தக் கோரிக்கையை வாபஸ் பெறுமாறு செய்தார்.

இரு நாடுகளுக்கும் மவுண்ட்பாட்டனே சில காலம் கவர்னர் ஜெனரலாக இருப்பார் என்று முதலில் கருதப்பட்டது. இதற்குக் காங்கிரஸுடன் சேர்ந்து ஜின்னாவும் ஒப்புதல் தந்தார். ஆனால் ஜூலை தொடக்கத்தில் ஜின்னா தாமே பாகிஸ்தானின் கவர்னர் ஜெனரலாக இருக்கப் போவதாக அறிவித்தார்! ஒரே கவர்னர் ஜெனரல் என்றால் இரு நாடுகளுக்கும் இடையில் ஏதோ பிணைப்பு இருப்பது போல் அர்த்தமாகிவிடும் என்று அவர் அஞ்சினார் போலும்! மேலும் இந்தியா—பாகிஸ்தான் ஆகிய இரு தேசங்களுக்கிடையிலும் மவுண்ட்பாட்டன் நடுநிலையோடு நடந்து கொள்வார் என்ற நம்பிக்கை லீகுக்குக் குறைந்து போய்விட்டது. ஜின்னாவின் அறிவிப்பையொட்டி மவுண்ட்பாட்டன் இந்தியத் தலைவர்களிடமும் பேசினார். அவர்களில் ஒருவரே, இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருக்க விரும்பினால், தமக்கு ஆட்சேபணை இல்லை என்று தெரியப்படுத்தினார். ஆனால் அவர்கள் ஒருமுகமாக 'மவுண்ட்பாட்டன்தான் வேண்டும்' என்று உறுதியளித்தனர்.

ஸைல்ஹெட் ஜில்லா பாகிஸ்தானில் சேர்ந்தது. வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் கஃப்பார்கானின் செஞ்சட்டையினரும் காங்கிரஸும் கூட்டணி அமைத்திருந்த போதிலும், தூண்டிவிடப்பட்டிருந்த மதச்சார்பான உணர்வுகளை வெல்ல அவர்களால் முடியவில்லை. வாக்கெடுப்பின் முடிவு பாகிஸ்தானுடன் இணைய வேண்டும் என்பதாகவே இருந்தது. வங்கத்தையும், பஞ்சாபையும் துண்டாட எல்லைப்புறக் கமிஷன்கள் அமைக்கப்பட்டன. ராட்கிளிஃப் தலைமையில் அமைந்த இரு கமிஷன்களிலும் சமமான பலத்தில் லீக், காங்கிரஸ் அங்கத்தினர்கள் இருந்தனர். இந்தக் கமிஷன்களின் தீர்ப்புக்கள் இரு சாராரையுமே திருப்திப்படுத்தவில்லை. ஆயினும் தீர்ப்புக்கள் ஒப்புக்கொள்ளப்பட்டன.

நிலத்தை மட்டும் பங்கிட்டால் போதுமா? அரசு அதிகாரிகள், கழகங்கள், நிறுவனங்கள், தஸ்தாவேஜுகள், எத்தனையோ விதமான லாப நஷ்டக் கணக்குகள், கடன்கள், சொத்துக்கள் முதலிய எல்லாவற்றையுமே பங்கு பிரிக்க வேண்டியிருந்தது. பிரும்மாண்டமான பணி. பிரமித்துவிடாமல் இந்திய, பிரிட்டிஷ் அதிகாரிகள் நிறைவேற்றி வைத்தனர். அரசியல்வாதிகளும் பொறுப்புணர்வுடன் ஒத்துழைத்தனர். பட்டேல், பிரசாத் ஆகியோருடன் பிரிவினை கவுன்ஸிலில் வி. ஆரும் இடம் பெற்றார். இவர்களுக்கு எதிர்ப்பக்கத்தில் ஜின்னா, லியாகத், நிஷ்டார் ஆகியோர் அமர்ந்தனர்.

காங்கிரஸின் சரித்திர மேடையில் அன்றைய பிரதான நடிகர்கள் நேருவும் பட்டேலுமே. ராஜாஜியும் ஆசாத்தும் அவர்களைவிடச் சற்றுக் குறைவான, ஆனால் குறிப்பிடத்தக்க பணிகளைச் செய்தனர். காந்தி ஒதுங்கி இருந்தார். ஆனால் அழைக்கப்பட்டால் யோசனை கூறவும் தமது செல்வாக்கைப் பயன்படுத்தவும் தயாராயிருந்தார்.

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

"சொந்தமா ஒரு தொழிற்சாலை அமைக்கிற அளவுக்கு எப்படிப் பணம் சம்பாதிச்சே?"

"ரொம்ப சிம்பிள். எங்கப்பா அப்பப்போ அப்ளிகேஷன் போடக் கொடுத்த பணத்தைச் சேர்த்து வெச்சிருந்தேன்."

— கதிர்வேல்



# யூஸ்லெஸ் தலையங்கம் பேஸ்லெஸ் இல்லை!

வட்டமேஜை

* வேறு யாருமே இல்லாத தியேட்டருக்குள் எஸ்.வி. சேகரும் ராம்ஜியும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்களே, ஒருவேளை அவர்களிருவரும் சேர்ந்து நடித்த படம் அந்தத் தியேட்டரில் ஓடிக் கொண்டிருந்ததோ?

சென்னை – 14, எஸ். வாசுதேவன்.

* தீபாவளி சிரிப்பிதழுக்கு மணி மகுடமாய் அமைந்திருந்தது, எஸ்.வி. சேகர்–ராம்ஜியின் உரையாடல் தான். ஒருவருக்கொருவர் சளைக்காமல் மாற்றி மாற்றி அறுத்த விதம் அருமை!

மதுரை – 20, எஸ். ஜே. இதயா.

* ஐந்து சிறுகதைகளும் அணுகுண்டு, ஊசி வெடி, சரவெடி, வெங்காய வெடி, யானை வெடியென்ன ஐவகை நகைச்சுவை!

தேரழுந்தூர், மு. ஞானகிராமன்.

* சிரிப்பிதழ் என்றாலும்கூட பக்கத்திற்குப் பக்கம் வெளியான பொன்மொழிகள் சிந்திக்க வைத்தன. (கழுத்துதான் கொஞ்சம் சுளுக்கிக் கொண்டது!)

அர்வக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

* தீபாவளிச் சிரிப்பிதழைப் படித்தேன். ஒரு பக்கம் கூடச் சிரிக்கிறாற் போல் இல்லையே சார்!

இலால்குடி, ரா. சுந்தர்

* கல்கி தீபாவளி சிரிப்பிதழ் படித்து ரொம்பக் காலத்துக்குப் பிறகு இப்போதுதான் வாய்விட்டுச் சிரித்து மகிழ்ந்தோம்!

திருமயம், கா. அப்துல்மஜீத்.

* மதிப்பு வாய்ந்த தலையங்கப் பகுதியை 'யூஸ்லெஸாக' எழுதிய உம்மை என்னவென்று சொல்வது?

சிங்காரப்பேட்டை, என். சங்கர்.

* தீபாவளி சிரிப்பிதழில் சிரிக்க வைத்த (சிந்திக்கவும் வைத்த) யூஸ்லெஸ் தலையங்கம் பேஸ்லெஸ் அல்ல! மிகப் பெரிய ஆற்றலையின் வெளிப்பாடு தான் நகைச்சுவையாகி, தலையங்கமானது.

ஈரோடு – 2, அருண்.

* 'ஆவ நாழி' திரைப்படத்தின் காட்சிகளைப் படங்களுடன் பிரசுரித்திருந்த கல்கி தீபாவளிச் சிறப்பிதழ் தனித்து நின்று தான் ஜொலித்துவிட்டது.

வேலூர், கலைஞர்ப்ரியா.

* சுபாவின் 'சின்னச் சின்ன கனவுகள்' தீபாவளி தொடர் அட்டகாசமாக ஆரம்பமாகியுள்ளது.

சின்னசேலம், இரா. வேல்மணி

* 'மோகம் என்பது இதுதானோ?' தொடரின் முதல் அத்தியாயம் படித்தேன், ரசித்தேன். அடுத்த வாரம் நாளையே வராதா என ஆதங்கமாக உள்ளது!

சென்னை – 4, டி. ஆர். சந்திரசேகரன்.

* கல்கி 14.9.86 இதழில் குறிப்பிட்டுள்ள குடமாத்தியைச் சேர்ந்த மாணிக்கம் என்ற சிறுவனைப் பாண்டியில் உள்ள அரசு மருத்துவமனையில் சேர்த்து, தலைமைக் கண் மருத்துவர் டாக்டர் எஸ். கந்தமூர்த்தி அவர்களால், கண் பரிசோதனை செய்து பார்க்கப் பட்டது. அனைத்துப் பரிசோதனைகளுக்குப் பின், சிறுவனின் இடது கண் ஊட்டச் சத்துக் குறைவினாலும், வலது கண் பிறவியிலேயும் பாதிக்கப்பட்டுள்ளது என்பது மருத்துவரின் முடிவு. தற்போது சிறுவனின் வயது 7. அச் சிறுவன் 10 அல்லது 12 வயதடையும்போது அவனின் இடது கண் சிறிதளவு பார்வை பெற வாய்ப்புண்டு என்கிறார் மருத்துவர். அச்சிறுவனுக்கு வைட்டமின் மாத்திரைகள், தேக ஆரோக்கிய மருந்துகள் ஆகியவைகளை வாங்கிக் கொடுத்து, அவனை அவன் தந்தையுடன் குடமாத்திக்கு அனுப்பி வைத்தோம்.

பாண்டிச்சேரி, எம். கே. ராமச்சந்திரன்.
காரியதரிசி, லயன்ஸ் கிளப், பாகூர்.

* ஸ்ரீநிவாஸைப் பற்றி 12.10.86 கல்கியில் வெளியிட்டமைக்கு எங்களது உளம் கனிந்த நன்றி. ஆனால் ஒன்று. எங்களுக்கு C.B.S.E. பற்றி அன்றும் இன்றும் என்றும் நல்ல மதிப்பு. தங்கள் கட்டுரையின் முடிவில் "பெற்றோர்கள் தங்களது குழந்தைகளை C.B.S.E. பள்ளியில் சேர்ப்பதற்குப் பல முறை யோசிக்க வேண்டும்" என்று எழுதியுள்ள கருத்தை ஸ்ரீநிவாஸோ நானோ கூற வில்லை.

சென்னை – 28, எஸ். கோதண்டராமன்.

# நீங்கள் யாருக்குப் பயப்படுவீர்கள்?

* ஏ. சுகுமார், சென்னை — 97

? கோட்டையை விட்டு வெளியில் வந்து இந்திப் போராட்டம் நடத்தப் போவதாய்க் காளிமுத்து கூறிக் கொண்டிருந்தாரே! கோட்டையை விட்டு வெளியில் வந்தாயிற்று. சொன்னபடி போராட்டங்கள் நடத்துவாரா?

! இப்போதைக்கு அவருக்கு இந்திப் பிரச்னையைவிட ஜெயலலிதா பிரச்னைதான் பூதாகரமான பிரச்னை என்பது அவருடைய பேட்டிகளிலிருந்தே தெரியவில்லையா?

* ஆர். கே. அருள் செல்வன், விக்கிரபாண்டியம்

? சமீபத்தில் மெய்மறந்து ரசித்தது எது?

! மெய்மறந்து அல்ல; வியந்து ரசித்தது. தமது தயாரிப்பான 'மாவீரன்' படம் பற்றி விவிதபாரதி வர்த்தக ஒலிபரப்பில் விளம்பரம் செய்யும் ரஜனிகாந்த், வர்க்க வேறுபாடுகளைப் பற்றிப் பேசியதைக் 'கேட்டு அசந்து போனேன். ரஜனிகாந்த் எப்போது கம்யூனிஸ்ட் ஆனார் என்று ஆச்சரியப்படுகிறேன்! ச்சே! மார்க்ஸும் லெனினும் இப்படியெல்லாமா கொச்சைப்படுத்தப்பட வேண்டும்? கம்யூனிஸ்டுகள் வெட்கப்படுகிறார்களோ இல்லையோ, நான் வெட்கப்படுகிறேன்.

? நீங்கள் யாருக்குப் பயப்படுவீர்கள்?

! யாருக்குப் பயப்பட வேண்டும்? 'அஞ்சுவது அஞ்சாமை பேதமை' என்கிறார் வள்ளுவர். 'நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்!' என்று முழங்குகிறார் அப்பர். 'அஞ்சாமை! அஞ்சாமை! இலட்சியத்தை அடைவதற்கான ஒரே வழி அது ஒன்றேதான்!' என்று அறைகூவல் விடுக்கிறார் விவேகானந்தர். 'அச்சமில்லை! அச்சமில்லை!' என்று கர்ஜிக்கிறார் பாரதி. தீய எண்ணங்கள் எட்டிப் பார்க்கும்போது, அவற்றைச் செயல்படுத்த முடியாத அளவுக்குக் கோழையாகவும், நல்ல எண்ணங்கள் தோன்றும்போது அவற்றைச் செயல்படுத்துவதற்கான துணிச்சல்காரனாகவும் இருக்கவே விரும்புகிறேன்.

* கு. கணேசன், சென்னை — 15

? இத்தாலியப் பெண்ணை மணந்து கொண்டிருக்கும் ராஜீவ் காந்தி, அயலுறவுத் துறை (IFS) அதிகாரிகள், இந்தியப் பெண்களைத் தவிர, அந்நியப் பெண்களைத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது என்று தடை உத்தரவு போட்டிருக்கிறாரே?

! தடை உத்தரவா? அல்லது கைட் லைனா? தடை உத்தரவு என்றால் சட்டப்படி செல்லாது என்பதால் கைட் லைனாகத்தான் இருக்கும். உள்நாட்டுப் பாதுகாப்புக் கருதிய கைட் லைன் மட்டும்தான் என்றாலும் அதுவும் தனி மனிதன் சுதந்திரத்திலும் அவனது அந்தரங்க வாழ்விலும் குறுக்கிடுவதால் ஆட்சேபணைக்குரியதே. மேலும் மேலிட அதிருப்திக்கு அஞ்சுகிறவர்கள்; பிரமோஷன் முதலியன பறிக்கப்படலாம் என்று பயப்படுகிறவர்கள் கைட் லைனையே சட்டமாக ஏற்கக் கூடும். எனவே அரசு இதனை வாபஸ் பெறுவது அவசியம்.

* வலங்கை ஜி. ராஜசேகர், வளையமாபுரம்

? நம் நாட்டை வெளியிலிருந்து வந்து சுரண்டிய ஆங்கிலேயர்களுக்கும் இங்கிருந்து கொண்டே சுரண்டும் அரசியல்வாதிகளுக்கும் என்ன வித்தியாசம்?

! அன்றைக்கு ஆங்கிலேயர்களை எதிர்த்து எழுதியவர்களும் போராடியவர்களும் தேசபக்தர்கள் என்று வர்ணிக்கப்பட்டார்கள். இன்றைய அட்டூழியங்களை எதிர்ப்பவர்களோ, பிழைக்கத் தெரியாதவர்கள் என்று கேலி செய்யப்படுகிறார்கள். இதுதான் வித்தியாசம்.

* அ. கயல்விழி, விருத்தாசலம்

? தெ. நி. மீ. வ.?

! க. வ. அ. வ. அ. எ. போ. (அரசு அண்ணே, கண்டுக்காதீங்க!)

* ஜி. மெய்யப்பன், லெட்சுமாங்குடி

? 'முத்தம் கொடுத்து நடிப்பதில் தவறில்லை' என்று நடிகை ஜீவிதா பேட்டியளித்துள்ளாரே?

! இதுபற்றியெல்லாம் கவலைப்பட வேண்டியது அவருடன் சேர்ந்து நடிக்கப் போகும் நடிகர்கள்தானே! நமக்கென்ன வந்தது?

## நீங்கள் கேட்டவை—தராசு

* ஸ்ரீக்ருஷ்ணகானப்ரியன், குடியாத்தம்

? 'ராஜீவ் பிரதமராக, இந்திராவின் மரணத்தைத் தவிர வேறென்ன தகுதியிருந்தது?' என்கிறாரே ரஜனீஷ்!

! இரண்டு வருஷங்களுக்கு முன் நானும் அப்படித்தான் நினைத்தேன். விரைவிலேயே என் கருத்தை மாற்றிக் கொள்ள நேர்ந்ததில் மிகவும் மகிழ்ந்தேன். அதுசரி, ரஜனீஷின் சாமியார் அந்தஸ்துக்குக் கேவலம், உடல் நிர்வாணக் கவர்ச்சியைவிட வேறென்ன இருக்கிறது?





* கா. அப்துல்மஜீத், திருமயம் *

? கோயிலிலிருந்து கிடைக்கும் உபரி வருவாயை நடமாடும் கோயில்களான குழந்தைகளின் சத்துணவுத் திட்டத்திற்குப் பயன்படுத்துவதைக் கல்கி குறை கூறலாமா?

! கோயில் உபரி வருமானத்தைப் பயன்படுத்தி சத்துணவுத் திட்டத்தை நடத்தப் போவதாக அரசு கூறவில்லை. வரிப் பணத்தைக் கொண்டு நடத்தப் போவதாகத்தான் கூறியது. மேலும் வருவாயைப் பெருக்கிக் கொள்ள மதுவிலக்கை வேறு ரத்து செய்தது. எனவே சத்துணவுத் திட்டத்தை மக்கள் செலுத்தும் வரிப் பணத்திலிருந்துதான் நடத்த வேண்டும். அதுதான் முறை. அப்படிச் செய்ய முடியவில்லையென்றால் அரசு தன் தோல்வியை ஒப்புக் கொள்ள வேண்டும். மேலும் சத்துணவுத் திட்டம் ஒரு நல்ல தர்ம காரியம்தான் என்றாலும் அதை அமல்படுத்துவதில் உள்ள ஊழல்களைப் பார்க்கையில் 'கோயில் பணத்தைத் தொடாதே' என்றுதான் கூறத் தோன்றுகிறது!

* இராமலிங்கம், தக்கலை

? நீல. பத்மநாபன், சுந்தர ராமசாமி — இருவரின் எழுத்து நடையையும் ஒப்பிடுங்கள்.

! இரண்டு பேருமே விஷயங்களுக்கு முக்கியத்துவம் தந்து எழுதுகிறவர்கள். வார்த்தை அலங்கார ரதங்களின் மூலம் கதைகளை வேகமாகக் கொண்டு செல்லும் ஜனரஞ்சகத்தை இருவருமே விரும்பாதவர்கள். எல்லாவற்றையும்விட முக்கியமானது, இருவருமே ஆபாச எழுத்துக்கு அப்பாற்பட்டு நிற்பவர்கள்.



* நடிக்கென்ன கவலை?



* பூதாகாரப் பிரச்னை!

* இரா. சுவாமிநாதன், தென்பாதி

? தேள் கொட்டி அவஸ்தைப்பட்ட அனுபவம் உண்டா?

! தேள் கொட்டி அல்ல; ஆனாலும் தேள் கொட்டியது போன்று அவஸ்தை பட்டதுண்டு. எவ்வளவோ விழிப்புணர்ச்சியுடன் செயல்பட்டும் எப்போதாவது தவறு நேர்ந்து விடும்போது ஏற்படும் அவஸ்தை அது.

ரூ 10 பரிசு பெறுபவர்:
* கா. அப்துல் மஜீத்,
கே.எஸ்.ஏ. கரீம் மளிகை,
திருமயம் 622 507
புதுக்கோட்டை (மா.வ.)



பொள்ளாச்சியில் குழந்தைகள் பள்ளி செல்லவும் வீடு திரும்பவும் ஆட்டோக்களில் அளவுமீறி ஆபத்தான விதத்தில் திணிக்கப்படுகிற காட்சி.

# பாரம் சுமப்பவர்கள்!

வீணையை
வீசி எறிந்துவிட்டு
வெள்ளைத் தாமரையாள் — இப்போது
இந்தக்
கிதார்களில்
'பாப்' இசை மீட்டிக்
கிறுகிறுப்படைகிறாள்.

அவள்
எறிந்த வீணைச்
சடலத்தின்மேல் மொய்த்துக் கிடக்கும்
அநாதைகளான
தாய்மொழிப் பாடல்கள்.

வேர்களைச் சுருட்டிக் கொண்டு
வெளியேறிவிட்டன — அவள் தோட்டத்து
முல்லையும் மல்லிகையும்.

இப்போது
குரோட்டன்ககள், தடித்த
தலையசைத்தாடும்போது
காற்றின் மேனியிலும்
காயங்கள் விழுகின்றன.

கல்வி ஏன்? எது? எதற்கு?
என்பதையெல்லாம்
அப்புறப்படுத்திய இவர்களின்
பைநிறையப் பாரம்!

சொந்த நாட்டிலேயே
சின்னப் பிஞ்சுகளை
அந்நிய மனிதராய்
வேகவைத்து எடுக்க
உலைவைக்கும்
கொலைக்கூடங்களுக்கே
கிராமங்களிலும் கிராக்கி!

கெட்ட
பட்டணத்திடம் பாடம்கேட்டுக்
கெட்டுப் போவதற்கே
கிராமங்கள் துடிக்கும்! அங்கும்
ஒவ்வாக் கல்விக்கு
உயிர்ப்பலி நாடோறும்.

இதோ
இந்தச் சிரிக்கும் சிப்பிகளுக்குள்
முத்தாகப் போகும்
மழைத்துளி விழுந்தால் —
ஆரம் தொடுக்கும் காலம் — அதை
யாரால் தடுக்க முடியும்?

விழுவது
ஆலகாலமானால்...?

— தமிழன்பன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032.

Assistant Editor: P.S. Mani — Editor: K. Rajendran

*Editorial Office:* 28, Fifth Street, Lake Area, Nungambakkam, Madras-600 034. (Phone: 473389)

*Administrative Office:* Race Course Road, Guindy, Madras-600 032 (Phones: 431543, 434157 Press: 434190)